SHIVAJI
TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு
கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
30th year
of Publication
11—7—1965

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ஆசிரியர்: திருலோகசீதாராம்

# காமராஜ் 63-வது பிறந்த நாள்

## ஜூலை 15-ல் திருச்சி நகரம் கொண்டாடுகிறது

காங்கிரஸ் அக்கிராசனர் ஸ்ரீ காமராஜ்63-வது பிறந்த நாள் விழா திருச்சியில் பெருந்திருவிழாவாக நடைபெறவிருக்கிறது.

திருச்சி நகரில் 63 வளைவு வாயில்கள் முக்கிய தெருக்கள் எங்கும் சிறப்பாக அமைக்கப்பட்டு வருகின்றன. மேலரண்சாலை தமிழ்ச் சங்கக் கட்டிடத்துக்கு அருகாமையில் இரட்டை வளைவுகள் கொண்ட மாபெரும் நுழைவாயிலை நகர் மன்றத்தார் அருமையாக அமைக்கிறார்கள்.

மாவட்டம் முழுவதிலுமிருந்து திரளான மக்கள் வண்டி வாகனங்களுடன் வந்து ஊர்வலத்தையும் விழாவையும் சிறப்பிப்பார்கள். பிரம்மாண்டமான ஊர்வலமும் மாபெரும் பொதுக் கூட்டமும் என்றும் கண்டிராத அளவில் அமையும்.

10, 11, இரண்டு நாட்களிலும் கருத்தரங்குகள் திருச்சி தேவர் மன்றத்தில் நடைபெற்றுள்ளன. தேசீய முன்னேற்றம் என்ற பொதுத் தலைப்பில், காவேரி நீர்ப்பாசனப் பரப்பில் விவசாயம், தொழில் வளம், மாதரின் பங்கு, கல்வி வளர்ச்சி ஆகிய நான்கு பொருள்களைப் பற்றி ஆராயப்பட்டது. பேறிஞர்கள் தயாரித்த வெள்ளையறிக்கைகளின் மீது நூற்றுக்கணக்கான அறிவாளிகள், கலைஞர்கள், வர்த்தகர்கள், விவசாயிகள், பேராசிரியர்கள் கூடி இந்த ஆராய்ச்சிகளை நடத்தினர்.

இறுதியாகத் தங்கள் அறிக்கைகளை உருவாக்குவார்கள். விழா நாளில் தலைவர் ஸ்ரீ காமராஜரிடம் இந்த அறிக்கைகள் சமர்ப்பிக்கப்படும்.

இந்த விழாவானது ஜூலை முதல் தேதியே தொடங்கி விட்டதென்று சொல்ல வேண்டும். அன்று தினம் தான் எழுவர் கால் பந்தாட்டப் போட்டியும் இதர விளையாட்டுப் போட்டிகளும் தொடங்கி வைக்கப்பட்டன. உள்துறை அமைச்சர் ஸ்ரீ கக்கன் அவர்கள் இவற்றைத் தொடங்கி வைத்தார்.

10-ந் தேதியில் உயர்நிலைப் பள்ளி மாணவர்க்கான தேசீயப் பாடல் போட்டிகள் நடைபெற்றன. 12-ந் தேதியன்று தேவர் மன்றத்தில் மாணவியர்க்கான பாடல் போட்டியும் 13-ந் தேதியன்று 'நாட்டுக்கு காமராஜ் செய்துள்ள சேவை' என்பது பற்றி மாணவ மாணவியரின் பேச்சுப்போட்டியும் நடைபெறவிருக்கிறது. 14-ந்தேதியன்று இந்த மாவட்டத்திலுள்ள அனைத்துக் கல்லூரியின் மாணவர்களும் கூடி, தேசீய முன்னேற்றத்தில் மாணவர் பங்கு என்பது பற்றிப் பேச்சுப் போட்டி நடத்துவார்கள்.

விழா நாளான 15-ந்தேதி காலை தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் தலைவர் வருகிறார். அங்கு தலைவரை வரவேற்று இன்ஸ்பெக்ஷன் பங்களா வரையிலும் டி. வி. எஸ். வளைவு வழியாக ஊர்வலமாக அழைத்து வருகிறார்கள்.

8 மணி முதல் மலைக்கோட்டை, திருவரங்கம், திருவானைக்காவல் இறை வழிபாடு நடத்திவிட்டுத் தலைவர் திரும்புகையில் தேவர் மன்றத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் கவியரங்கில் பிரசன்னமாயிருப்பர்.

கவியரங்கம் திருமுருக கிருபானந்தவாரியார் தலைமையில் காலை 9 மணிக்குத் தொடங்குகிறது. எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்ற பொதுத் தலைப்பில் பத்துக் கவிஞர்கள் கூடிப் பாட்டிசைக்கின்றனர். ஜனநாயகக் குடியரசு ஏற்பட்ட பிறகு ஒவ்வொருவரும் தாங்கள் இந்நாட்டின் மன்னர் என்ற உணர்ச்சியும் பெருமிதமும் அடையும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இந்த நாட்டின் நல்லரசாட்சியில் ஒவ்வொரு துறையினரும் பெற்றுள்ள முன்னேற்றங்கள், நல்வாழ்வு, அவர் தம் கடமை இவற்றைக் கவிஞர்கள் பாட்டிசைப்பர்.

கிராமியப் பாடல்களில் புகழ் பெற்ற கொத்தமங்கலம் சுப்பு உழவராகவும், திரைப்படக் கவியரசராக விளங்கும் கண்ணதாசன் கலைஞனாகவும், சக்தி சரணன் மாணவனாகவும், வித்வான் துரைசாமி ஆசிரியராகவும், அரங்க சீனிவாசன் தொழிலாளியாகவும், மலையமான் வியாபாரியாகவும், என். ராகவன் படைவீரராகவும் பாரதியாரின் பேத்தி லலிதா பாரதி பாரதப் பெண்ணாகவும், தமிழ்ச்செழியன் ஹரிஜனனாகவும் செல்லப்பன் வாக்காளராகவும் தோன்றிப் பாடுகின்றனர். வழக்கம் போல் ஆசிரியர் திருலோக சீதாராம் வரவேற்புக் கூற, அகில இந்தியத் தமிழ் எழுத்தாளர் பெருமன்றச் செயலர் அ. வெ. ர. கிருஷ்ணசாமி வாழியுரை கூறுவார்.

பிற்பகல் 2 மணிக்கு நகர் மன்றத்திலிருந்து பிரம்மாண்டமான ஊர்வலம் புறப்பட்டு புத்தூர், பாளையம் பஜார், சாலை ரோடு, மேலரண்சாலை, பழைய ஆஸ்பத்திரி, பெரிய கடை வீதி, சின்னக்கடைத்தெரு, புகழியபிள்ளை சந்து, கீழரண் சாலை வழியாக டாக்டர் மதுரம் மைதானத்தை அடைந்து பொதுக் கூட்டம் நடைபெறும். இடையில் 5 மணிக்குத் தலைவர் காமராஜ் மேலரண்சாலையில் தமிழ்ச் சங்கக் கட்டிட மாடியிலிருந்து ஊர்வலத்தைக் காண்பார்.

பொதுக் கூட்டம் முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் தலைமையில் நடைபெறும். வடக்கேயிருந்தும் தலைவர் பலர் வருவர் என்று எதிர்பார்க்கப்படுகின்றனர். தலைவருக்கு இந்த மாவட்டத்தின் தேர்தல் நிதியளிப்பும் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசளிப்பும் பொதுக்கூட்டத்தில் நடைபெறும்.

திருச்சி நகரம் ஜூலை 15-ல் என்றும் கண்டிராத விழாக்கோலம் பூண்டு புத்துணர்ச்சி பெறும்.

விடுதலைக்குப்பிறகு பாரதம் புதிய வாழ்வு பெற்று வருகிறது. கூட்டுறவு சமுதாயம், சமதர்மபாணி சமுதாயம் என்று விரிவடைந்து இப்போது ஜனநாயக சமதர்மமே நமது லட்சியம் என்று தெளிவாகிவிட்டது. அதைத் தமது வாழ்நாளில் அடைந்தே தீருவது என்று கங்கணங்கட்டிக் கொண்டிருக்கும் ஸ்ரீ காமராஜுக்குப் பல்லாண்டு கூறுகிறோம்.

★



# பேரின்ப வாழ்வு

திரு. இ. வே. சோமசுந்தரம், B.A., P & A (DIP)

இராமகிருஷ்ண விஜயம், மாசிகையிலிருந்து மறுபதிப்பு.

## 23. சாவைப் பற்றிச் சிந்தனே.

உனது உலக வாழ்வு மிக விரைவில் முடிந்துவிடுகிறது. மறு உலகில் உனது கதி என்னவென்று எண்ணிபார்.

'இன்றைக்கு இருப்பாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லை' என்கிருர் தாயுமானுர்.

ஒருவன் கண்ணெதிரிலிருந்து மறைந்து விட்டால் கருத்தில் இருந்தும் கடிதில் மறக்கப்படுகிருன்.

இக்கணத்தில் நடப்பதை மட்டும் கவனித்துக் கொண்டு வரப்போகிறவைகளைப்பற்றிக் கவலைப் படாமல் இருக்கிருர்களே! அந்தோ மக்களின் மூடத்தனமும் கரையாத கல்மனமும் என்னே!

இன்றே இறந்துவிடுகிறவனைப்போல் உனது சிந்தனை,செயல்கள் அனைத்தையும் ஒழுங்குபடுத்திக்கொள். அதுவே நீ உண்மையில் நலம்பெற வேண்டுமானுல் செய்யவேண்டும்.

உண்மையுள்ளத்தூய்மை உன்னிடம் உண்டு என்ருல் நீ மடிந்து அழிவதை அஞ்ச மாட்டாய்.

மரணத்தைக் கண்டு மயங்குவதைவிடத் தீயவைகளைவிட்டு தூர விலகுவது நல்லது.

இறப்பதற்கு இன்று தயார் இல்லை, யென்ருல் நாளைக்கு மட்டும் எப்படித் தயாராகி விடப்போகிருய்?

நாளை என்பது நிச்சயமில்லை. நாளைவரை உயிருடன் இருப்பாய் என்பதற்கு உனக்கு என்ன உறுதி உளது?

நாளுக்கு நாள் நம் பழக்க வழக்கங்களில் தூய்மை நெறியில் மிகச் சிறிய முன்னேற்றமும் சீர்திருத்தமும் கூட இல்லையே! அப்படி இருக்க நெடுநாள் வாழ்வதால் நமக்கு என்ன பயன்?

அந்தோ! நெடியகாலம் வாழ்வதில் நம் பாபங்களும் தீமைகளும் மிகுதிப்படுகின்றவே அன்றி நாம் தூய்மை மிகப்பெறுவதாகக் காணேமே?

ஆ! நாம் இவ்வுலகில் ஒரே நாளையாவது ஒழுங்காகக் கழித்தோமானுல் எவ்வளவு சிறப்பாக இருக்கும். தாம் அறவாழ்கை வாழ விரும்பும் மனமாற்றம் பெற்று எவ்வளவு காலம் ஆகிவிட்டது என்று சிலர் பெருமைப்படுகிருர்கள். ஆனுல் பெரும்பாலும் அந்த மனமாற்றத்தால் அடைந்த சீர்திருத்தமும் மிக மிகச் சிறிதே எனக்காண்கிருேம்.

இறந்துவிடுவது பயங்கரமானதாக இருந்தால் நீண்டகாலம் வாழ்வதை விடத் துன்பந்தருவதாக இருக்கலாம். தன் கண்ணுக்கும் கருத்துக்கும் எதிரே எப்போதும் தன் முடிவுகாலத்தைப் பற்றி நல்ல ஏற்பாடுகளை வைத்துக்கொண்டு நாள்தோறும் தன் மரணத்துக்குத் தயாராகத் தூய்மை நெறியில் முன்னேறுபவனே இன்பம் உடையவன்.

யாராவது ஒருவர் மடிவதைக் கண்டால் அதே வழியில் நாமும் செல்ல வேண்டும் என்பதை நினைவில் வை.

காலையிலோ இரவிற்கு முன்னே இறந்துவிடலாம் என நினை. மாலையினுல் மறுநாள் காலையில் இருப்போம் என்று உறுதியாக இராதே.

ஆதலால் எப்போதும் தயாராக இரு; அதற்கு ஏற்றபடி வாழ்க்கையைத் தூய்மைப் படுத்திக்கொண்டே இரு; தயாராக இல்லாத மன நிலையில் எதிர்பாராது எமன் வருர்; ஏமாற்றத்தை அடையாதே.

தாங்கள் எதிர்பாராத வேளையில் திடீரென்று பலர் இறந்துவிடுகின்றனர். ஏனெனில் நாம் எதிர்பார்க்காத நேரத்தில் நமன் வந்துவிடுகிருன்.

கழிந்துபோன உன் வாழ்நாள் முழுவதையும் பற்றி கடைசி நேரத்தில் நீ கருதுவது, இப்போது நினைத்து இருப்பதற்கு மிக வேறுபட்ட அளவாகவே இருக்கும். முன் ஆண்டுகளிலே எவ்வளவு கவலையின்றி ஒழுங்கீனமாகவும் இருந்துவிட்டோமே என்று அந்நேரத்தில் மிக மிக வருந்துவாய்.

நாம் சாகுந்தருவாயில் எப்படி இருக்கவேண்டும் என்று எவன் நினைப்பானே அந்தத் தூய பற்றற்ற கட்டற்ற இன்ப அமைதிநிலையை நாடி இப்போதே எவன் உழைக்கிருனே அவனே உண்மையில் அறிவாளியும், இன்பம் உடையவனும் ஆவான்.

1. இவ்வுலக நுகர்ச்சிகளை முழுமனதுடன் துச்சமெனத் தள்ளுதல்.

2. தூய்மை அடைவதில் தீவிரமாக முற்போக்கு அடைவதில் ஆர்வம்.

3. கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிப்பதில்விருப்பம்.

4. உண்மையில் மனக் கழிவிரக்கம் அடைவதில் உள்ள வருத்தம்.

5. கீழ்ப்படிந்து அடக்கத்துடன் இருப்பதற்குத் தயாராக இருத்தல்.

6. தன்னலனைத் தியாகம் செய்தல்.

7. தூய்மைத் தெய்வீகப் பணியில் பரவசப் படல்.

8. ஆனுல் வரும் எல்லா விதமான இன்னல்களையும் பொறுத்துக் கொள்ளும் தன்மை.

இவை நாம் இன்பமாக அமைதியாக இறப்போம் என்பதைப்பற்றி நமக்குத் தன்னம்பிக்கை அளிக்கின்றன.

உடல் நலனுடன் இருக்கும்போது நற்பணிகளை நீ புரியலாம். உடல் நலிவுற்று இருக்கும்போது உன்னுல் என்ன செய்யமுடியும்?

நோய்வாய்ப்பட்டுத் தேர்பவர்களில் மிகச் சிலரே சீர்திருத்தமும் நற்பண்பும் செய்கின்றனர். அங்ஙனமே நெடும் சுற்றுப்பிரயாணம் செய்பவர்களுங்கூட தெய்வீகத் தூய்மை அடைவது அரிதே.

5. நண்பர்களையும் உற்ருர் உறவினர்களையும் நம்பி இராதே. உன் உள்ளத் தூய்மைக்கும் அமைதிக்கும் வேண்டியவைகளைப் பின்னர் கவனிக்கலாம் எனக் காலம் தாழ்த்தாதே. ஏனெனில் நீ எண்ணி இருப்பதைவிட மிக விரைவில் மக்கள் உன்னை மறந்துவிடுவர்.

ஆதலால் பிறர் உதவியை நாடிக் காத்து இருப்பதை விடக் கூடியவிரைவில் நற்பணிகளைப்புரிய விரைந்திடு! தூய்மையையும் அமைதியையும் அடைய முந்து!

இப்போதே நீ உன்னைப் பற்றியே கவனித்துக் கொள்ளாவிட்டால் பின்னுல் உன்னைப்பற்றி யார் கவலையுடன் கவனிக்கப்போகிருர்கள்?

இப்போது கிடைத்திருக்கும் வாய்ப்பு மிக அரிது. விடுதலை அடைய இதுவே நன்னுள். இக்கணமே நந் நிலையை அடைய அரிய தருணம்.

ஆனுல் அந்தோ இங்கே வீணுகக் காலத்தைச் சோம்பிக்கழிக்கிருயே! என்றும் நீடுழி தெய்வ இன்ப அமைதியில் திளைக்கும் பேற்றைப்பெறும்வாய்ப்பை வீணுக்குகிருயே!

உன்னையே நீ திருத்திக் கொள்ள ஒரே ஒரு நாள் அல்லது ஒரே ஒரு மணி காலம் உனக்கு அளிக்கும்படி நீ வேண்டும் ஒரு நேரம் வரும். ஆனுல் அப்போது அந்த நேரம் உனக்கு அளிக்கப்படும் என்று சொல்லமுடியாது.

ஓ! அன்பனே! நீ எப்போதும் முடிவு காலத்தைப் பற்றிய நினைவும் அச்சமும் மனதில் வைத்திரு. ஆனுல் மிகப் பெரிய துன்பத்திலிருந்து உன்னை நீ காத்துக் கொள்ளுகிருய்; மிகக் கொடிய அச்சத்திலிருந்து உன்னை விடுவித்துக் கொள்ளுகிருய்.

சாகுந்தருவாயில் அஞ்சுவதற்குப் பதிலாக மகிழ்ச்சியோடு இருக்கும்படியாக வாழ்வை நடத்த முயல்.

உலகிற்கு இறந்தவன் போலாகக் கற்றுக்கொள். இறை அருள் நிலையில் வாழ்வோனுக ஆகிவிடு.

உலகப்பொருள்களை எல்லாம் தேடித்திரிந்து ஒதுக்கித்தள்ளும் உள்ளத் திண்மையைக் கற்றுக்கொள். ஆனுல் அவைகளின் மேல் பற்று அற்று இறை நிலையை எளிதில் அடையத் தகுதி பெறுவாய்.

கழிவிரக்கத்தாலும் தன் உடல் புலன் அடக்கத்தாலும் உடலைக் கசக்கினவை. அப்படிச் செய்து உன்னுல் தூய்மைத் தியாகப் பாதையில் தவருமல் சேவை செய்து வாழமுடியும் என்னும் நம்பிக்கையைப் பெற்று இரு.

ஓ! மூடனே! ஒரு நாள் கூட உறுதியாக உன் ஆயுள் இருக்கிறது என்று கூறமுடியாத நிலைமை இருக்கும்போது 'நீண்டகாலம் வாழ்வோம்' என்று நினைக்கிருய். இப்படி எத்தனை பேர் ஏமாந்து இருந்து திடீரென்று வாழ்வில் இருந்து இழுத்துச்செல்லப்பட்டனர்.

ஒருவன் கொல்லப் பட்டான்; அம்மனிதன் நீரில் மூழ்கிமடிந்தான்; இம் மனிதன் உயரத்திலிருந்து தவறி வீழ்ந்து இறந்தான்; இன்னெருவன் உண்ணும் போது உயிரிழந்தான்; மற்றெருவன்விளையாடும்போது மாண்டான்! — என்று அறிக்கைகளை அடிக்கடி கேள்விப்படுகிருய் அல்லவா!

ஒரு மனிதன் நெருப்பினுல் அழிகிருன். வேறெருவன் வாளால் மரணமாகிருன். மற்றெருவன் அம்மை நோயால் மாண்டு போகிருன். பிறன் ஒருவன் கள்ளர்களால் கொல்லப் படுகிருன்.

இப்படிச் சாவதே அனைவரின் முடிவும். மனிதன் வாழ்வு நிழல் ஓடுவது போலத் திடீரென்று இருந்த இடம் தெரியாது முடிந்துவிடுகிறது.

நீ இறந்த பிறகு உன்னைப் பற்றி மனத்தில் நினைப்பவர் யார்? உனக்காக இறைவனை இறைஞ்சுபவர் யார்?

ஆகையால் என் அருமை அன்பனே! செய்! இப்போதே செய்! உன்னுல் கூடிய நற்பணிகளைச் செய். ஏனென்ருல் நீ எப்போது மரிப்பாய் என்பதும் அல்லது மடிந்தபின் எந்நிலை எய்துவாய் என்பதும் உனக்குத் தெரியாதவையாக இருக்கின்றன.

ஆதலால் உனக்கு வசதியும் வாய்ப்பும் இருக்கும் போதே அன்புப் பணிகளை ஆற்றி என்றும் அழியாத பேரின்பப் பேறுகளைச் சேர்த்துக்கொள்.

உனது உள்ளத் தூய்மையையும் பேரமைதி நிலையாம் விடுதலையையும் மட்டுமே கவனி. இறை நிலை எய்தும் வழியை மட்டுமே ஊக்கத்துடன் கைக்கொள். மற்று எவற்றையும் ஒரு சிறிதும் கருதாதே.

அருள் நிலை அடைந்த பெரியார்களுடைய அறப் பணிகளைப் பின்பற்றி நடத்தி அவ்வருளாளர்களை நண்பர்களாக்கிக்கொள். இவ்வுலகில், இவ்வாழ்க்கையில், இடுக்கண் உற்ருலும் அவர்களால் அழியா நிலையுள்ள உலகத்தில் ஏற்கப்படுவாய்.

இவ்வுலகில் ஒரு நாடோடி போலவும் தொடர்பற்ற அன்னியன் போலவும் உன் மன நிலையை வைத்துக்கொள். இவ்வுலக வியவகாரங்களைப்பற்றிய கவலைகளால் எவ்விதத்திலும் பாதிக்கப்படாதவன் போல் இரு.

உன்னுடைய உள்ளத்தை உயர்திரு இறைவனிடம் வை; கட்டு இன்றி வைத்திரு. ஏனெனில் நிலையான இருப்போ உறைவிடமோ உனக்கு இங்கு இல்லை.

அவ்வுயர் நிலையையே நாடோறும் நாடி இரு. அத் தூயபேரமைதிநிலையையே வேண்டி விழைந்து விம்மி விம்மிக் கண்ணீர் மல்கிக் கனிந்த சிந்தையுடன் கசங்கி உருகு. அப்படி விழைவதால் மட்டற்ற மகிழ்ச்சியுடன் இறைவன் இணையடி நீழலை அடைவாய். அப்படியே ஆகுக.

★

# ரொடீஷியாவின் எதிர்காலம்

ரொடீஷியாவின் 'நிறத் திமிர்' மிகுந்த பிரதமமந்திரி இயான்ஸ்மித், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் பகிரங்கமாகச் சவால் விடுத்திருக்கிறார். ரொடீஷியாவிற்குச் சுயாட்சி வழங்குவது சம்பந்தமான சாத்தியக்கூறுகளை உயர்மட்ட அந்தஸ்தில் ஆராயும் பொருட்டு, அரசியல் சட்ட மகாநாடு ஒன்றைக் கூட்டுவதில் பிரிட்டிஷ் அரசாங்கம் முனைந்துள்ளதை இயான்ஸ்மித் கடுமையாக ஆக்ஷேபித்திருக்கிறார். குழப்பமும், கொள்கைத்தெளிவும் அற்ற இயான்ஸ்மித்தின்மற்ற அறிக்கைகளைக்காட்டிலும், இந்த விஷயத்தில் ஸ்மித் வெளியிட்டுள்ள கண்டனக்குறிப்பு மிகத் தெளிவாக அமைந்திருப்பதே ஒரு விசேஷமான திருப்பந்தான். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இத்தகைய நடவடிக்கைகள் ரொடீஷியாவின் உள்நாட்டு நிர்வாக விவகாரங்களில் தலையிடுவதாகக் கருதப்படும் என இயான்ஸ்மித் பிரிட்டனை எச்சரித்துள்ளார்.

ஆனால் உண்மையில் இத்தகைய மகாநாடு ஒன்று கூட்டப்பட்டாலொழிய ரொடீஷியாவின் எதிர்காலம் சுமுகமாயிராது என்பது தெளிவு. இயான்ஸ்மித்தின் காட்டுமிராண்டித்தனமான ஆட்சிக் கொள்கைகளின் கீழ் கால வரம்பின்றிக் காவலில் வைக்கப்பட்டுள்ள ஜோஷுவா என்கோமா மற்றும் புனிதர் சிதாலோ போன்ற ஆப்பிரிக்க விடுதலை இயக்கத்தின் பெருந்தலைவர்களை ஸ்மித்தின் அரசாங்கம் எவ்வித நிபந்தனையுமின்றி உடனடியாக விடுதலை செய்து, அவர்களையும் இந்த மகாநாட்டில் பங்குகொள்ளச்செய்தாலொழிய, ரொடீஷியாவின் அரசியல் அமைதிக்காகச் செய்யப்படும் எல்லாவித முயற்சிகளும் வியர்த்தமே என்பதைப் பிரிட்டிஷ் அரசாங்கமும் நன்கு உணர்ந்திருக்கிறது.

ஆயினும், சில மாதங்களுக்கு முன்பு ரொடீஷியாவின் அரசியல் சூழ்நிலையை ஆராய்ந்து வருவதற்காக, ஸாலிஸ்பரி சென்றிருந்த பிரிட்டிஷ் தூதுகோஷ்டியினருக்கு சிறையிலிருக்கும் ஆப்பிரிக்கத் தலைவர்களைச் சந்திக்க அனுமதி வழங்கப்படவில்லை என்பதை நினைப்பில் கொள்ளும்போது இயான்ஸ்மித்தின் வெறித்தனமும்பிடிவாதமும்மிகுந்த போக்குகளை எப்படிப் பிரிட்டனால் ஜீரணித்துக் கொள்ள முடிகிறது என்பது பெரும் வியப்பாக உள்ளது. ஆயினும் உலகின் 21 நாடுகளைச்சேர்ந்த 75 கோடி மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய காமன் வெல்த் பிரதம மந்திரிகள் மகாநாட்டில் ரொடீஷியாவின் நிலைமைபற்றி எதிரொலித்த கருத்துக்களையும் ஹெரால்டு வில்ஸனின் உறுதிமொழிகளையும் பார்க்கும்போது ஸ்மித்தின் நெறியும், மனிதாபிமானமுமற்ற ஆட்சித் தலைமையிலிருந்து ரொடீஷியாவிற்கு வெகு விரைவிலேயே விமோசனம் கிடைத்துவிடும் என நம்பத் தோன்றுகிறது. இங்குச் சந்தர்ப்பத்தில் கானு அதிபர் டாக்டர் என்குருமா, காமன்வெல்த் மகாநாட்டில் குறிப்பிட்ட கருத்தொன்றைச் சுட்டிக்காட்டுவது பொருத்தமாயிருக்கும்.

இயான்ஸ்மித்தின் தலைமையில் சிறுபான்மையினரான வெள்ளையர்கள் ரொடீஷியாவை அடக்கி ஆண்டு வரும்வரையில் ரொடீஷியாவிற்கு ஐ. நா. சபையிலோ காமன்வெல்த் அங்கத்திலோ பிரதிநிதித்துவ அந்தஸ்து வழங்கப்படுவதற்கு காமன் வெல்த் உறுப்பின நாடுகள் தங்களுடைய சம்மதத்தை வழங்கக் கூடாது என டாக்டர் என்குருமா கேட்டுக் கொண்டிருப்பது இயான்ஸ்மித்தைச் சிந்திக்க வைத்திருக்கும். கடந்த ஆண்டில் கூடிய காமன் வெல்த் பிரதம மந்திரிகள் மகாநாட்டில் ரொடீஷியப் பிரச்னைகளுக்குப் போதிய முக்கியத்துவம் காட்டப்படாததினாலேயே இயான் ஸ்மித்தின் ஆணவம் கட்டு மீறிப்போய்விட்டது என்பதைச் சர்வதேச அரசியல் பார்வையாளர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

எனவே சில வாரங்களுக்கு முன் கூடிய நடப்பு ஆண்டின் காமன் வெல்த் மகாநாட்டில் ரொடீஷிய விவகாரங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதோடு, இயான்ஸ்மித்தின் முறையற்ற நிர்வாகப் போக்குகள் பல நாடுகளின் பெருந்தலைவர்களின் மத்தியில் சர்ச்சிக்கப்பட்டன. ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி, கனடாவின் பிரதமர் பியர்ஸன் உள்ளிட்ட காமன் வெல்த் தலைவர்கள் அனைவரும் இயான்ஸ்மித்தின் தலைமையை அகற்றவேண்டிய அவசியத்தைப் பல கோணங்களில் தெளிவுபடுத்தினார்கள். டாக்டர் ஹேஸ்டிங்ஸ் பண்டா போன்ற ஆப்பிரிக்கத் தலைவர்களும் இயான்ஸ்மித்தின் அநாகரீகமான ஆட்சிக் கொள்கைகளையும் இன வெறியையும் சாடி ஸ்மித்தின் பிடியிலிருந்து ரொடீஷியாவை விடுவித்து அதற்குச் சுயாட்சி வழங்கவேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தியிருக்கின்றனர்.

ஆனால் இயான்ஸ்மித் புதியதாகச்சுதந்திரமடைந்துள்ள டாக்டர் ஹேஸ்டிங்ஸ் பண்டாவின் மாலவி, ஜாமோ கென்யாட்டாவின் கென்யா, ஜூலியஸ் நைரேரேவின் தலைமையிலுள்ள டான்ஜானியா ஆகிய பல ஆப்பிரிக்க நாடுகளை மனம்போனபடி தாக்கியிருக்கிறார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உறுதுணையாலும், பெருந்தன்மையினாலும் ஜனநாயகக் கோட்பாடுகளையும் அடைந்துள்ள இந்த ஆப்பிரிக்க நாடுகள், ரொடீஷியாவின் விவகாரங்களைக் குறித்துக் கவலையும் கண்டனமும் தெரிவித்து வரும் போக்கிலிருந்து அந்த நாடுகள் மீண்டும் தங்களது பழைய காட்டுமிராண்டித்தனமான நிலைக்கே திரும்பிச் சென்றுகொண்டிருப்பதாகத் தெரிகிறது என இயான்ஸ்மித் சுதந்திர ஆப்பிரிக்க நாடுகளின்மீது தன்னுடைய வெறுப்பை உமிழ்ந்திருக்கிறார். இயான்ஸ்மித்தின் இந்த அவதூறுகளுக்கு ஆப்பிரிக்க மக்களின் சார்பில் பதிலளிக்கும் வகையில் சொற்பொழிவொன்றில் நைரேரே தன்னுடைய உணர்ச்சிகரமான சொற்பொழிவின்போது பின்வருமாறு குறிப்பிட்டார்.

இயான்ஸ்மித்தின் காலித்தனமான ஆட்சிமுறைக்கு அஸ்தமனகாலம் நெருங்கிக் கொண்டிருப்பதினாலேயே கிலிபிடித்து இஸ்மித் இவ்வாறெல்லாம் பிதற்ற ஆரம்பித்திருக்கிறார். சுதந்திர உணர்ச்சியை ஆப்பிரிக்கர்களின் உதிரத்திலிருந்து அகற்றிவிட இயான்ஸ்மித் மேற்கொண்டுள்ள வழிமுறைகள் அனைத்தும் உண்மையில் அவர் தன்னுடைய ஆட்சியின் முடிவுக்குத் தோண்டிக்கொள்ளும் குழிகளேயாகும்.

நைரேரே மேலும் சொன்னார் சுதந்திரமென்பது என்னவென்று ஆப்பிரிக்கர்களுக்கு நன்றாகத் தெரியும். ஒரு சில பகுதிகளைத் தவிர்த்து, ஆப்பிரிக்காக் கண்டம் முழுவதும், காலனி ஆதிக்கப்பிடியிலிருந்து, அயராத போராட்டத்தின் காரணமாக பூரணமாக விடுபட்டுள்ளது. இயான்

**ஏ. ஆர். ராஜாமணி**

ஸ்மித்தின் நிர்வாகத்தின் கீழ் சந்தர்ப்பக் கோளாறுகளின் காரணமாக இன்னமும் அடங்கிக்கிடக்கும் ரொடீஷியாவிலுள்ள ஆப்பிரிக்கர்களுக்குக்கூடச் சுதந்திரமென்றால் என்னவென்பது புரியும். எனவேதான், அதற்குரிய எல்லாவித நியாயமான தியாகங்களையும் மேற்கொள்வதற்கு அவர்கள் அஞ்சுவதில்லை.

சுதந்திரம் என்பது பெயரளவில் புழங்கினால் மட்டும் போதாது. அதற்கு உண்மையானப் பொருள் என்னவென்பதை உரைத்துப் பார்க்கவே ஆப்பிரிக்காக் கண்டம் முழுவதிலுமுள்ள சுதேசி மக்கள் விரும்புகிறார்கள்.

நைரேரேயின் ஆக்ரோஷமான இந்தப்பேச்சு, ஆப்பிரிக்க மக்களிடையே மேலும் புதியதொரு எழுச்சியைத் தோற்றுவித்திருக்கிறது. கடந்த மே மாதத்தில் ரொடீஷியாவில் நடந்த பொதுத் தேர்தலின் போது, பதிவான வோட்டுக்களின் எண்ணிக்கையைக் கணக்கிடும்போது, இயான் ஸ்மித்தின் அரசாங்கத் தலைமைக்கு அஸ்தமன காலம் நெருங்கிவருதைத் தெளிவாக அறியலாம்.

ரொடீஷியாவின் மொத்த வாக்குரிமையுள்ள 1,89550 மக்களில் 36.5 சத விகிதத்தினரே அதாவது மூன்றில் ஒரு பகுதியினரான 69000 மக்களே வோட்டுப்பதிவு செய்துள்ளனர். இயான் ஸ்மித்தின் நிர்வாகக் கொள்கைக்கு இதைவிடக் கௌரவமான முறையில் ஆப்பிரிக்க மக்கள் தங்களுடைய மனக் கசப்பைக் தெரிவித்துக் கொள்ள முடியாது என்பது வெளிப்படை.

ரொடீஷியா, தென்னாப்பிரிக்கா, மொஸாம்பிக் போன்ற இன்னமும் காலனி ஆதிக்கப்பிடியில் உழன்று கொண்டிருக்கும் ஆப்பிரிக்க நாடுகளை, இனத் துவேஷமிக்க நிர்வாகப்பிடியிலிருந்து விடுவிப்பதற்கு எல்லாவிதமான முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

எனவேதான் ஆப்பிரிக்க மக்கள், எந்தவித அடக்குமுறைகளுக்கும் கலங்காமல் தொடர்ந்து கிளர்ச்சி செய்து வருவதைப் பாரதம் போன்ற நாடுகள் அனுதாபத்துடன் கவனித்து அவர்களின் சுதந்திரப் போராட்டத்திற்கு உற்சாகமளித்து வருகின்றன. இன்று ரொடீஷியா நாடுகளைப் போன்ற, இன்னமும் விடுதலை பெறாத நாடுகளைப் பற்றிச் சிந்திக்கையில் இரண்டு பிரச்னைகளே முக்கியமாகக் கருத்தில் கொள்ளப்படுகின்றன.

ஒன்று, ரொடீஷியாவின் இயான்ஸ்மித், தென்னாப்பிரிக்காவின் வெர்வோர்டு போன்றவர்களின் இன வெறிக்கொள்கைகள் இந்தப் பிராந்தியத்தை வெற்றி கொள்ளப் போகின்றனவா, அல்லது ஆப்பிரிக்க மக்கள் தங்களுடைய தியாக வேள்விக்கும், சுதந்திர உணர்ச்சிக்கும் உரிய பலனை அடையப்போகிறார்களா என்பதற்கு கிடைக்கும் திருப்திகரமான விடையிலிருந்தே, இந்த நாடுகளின் எதிர்காலத்தைக் கணிப்பது சுலபமாகயிருக்கும் என்பது உலக அரசியல் பார்வையாளர்களின் கருத்து.

ஆப்பிரிக்க மக்கள் சுதந்திரம் கோருவதில் தூய்மைக் கெடுதி ஒன்றுமில்லை. அது அவர்களுக்குள்ள பிறப்புரிமை என்பதை, ஜன நாயகத்தில் நம்பிக்கையுள்ள எவரும் மறுப்பதற்கில்லை. ஆனால், இயான் ஸ்மித்தின் கருத்தின்படி, ஆப்பிரிக்கர்கள், வெள்ளையர்களின் சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ளவே கர்த்தரால் படைக்கப்பட்டவர்கள் என்றாகிறது.

இத்தகைய மிருகத்தனமான மனப்போக்கை உடைத்தெறிவதற்காகத்தான், வெள்ளையர்களுக்கு எதிராக, தங்களுடையச் சக்தி முழுவதையும் திரட்டி ஆப்பிரிக்க மக்கள் தொடர்ந்து சமர் புரிந்து வருகிறார்கள். நைரேரே எச்சரித்துள்ளபடி, ஆப்பிரிக்க மக்களின் சுதந்திரத்திற்காகஏகாதிபத்திய வாதிகளின் ரத்தம் சிந்தப்படுமா; அல்லது ஆப்பிரிக்கர்களின் செங்குருதியை இந்த சுதந்திர வேள்விக்கு அர்ப்பணிக்கவேண்டியிருக்குமா என்பதில் இரண்டில் ஒன்றைத் தெரிந்து கொள்ளும் போக்கில் ஆப்பிரிக்கர்களிடமிருந்து பயங்கரமான எதிரொலிகள் கிளம்பியிருப்பதற்கு இயான்ஸ்மித் போன்றவர்களின் அசம்பாவிதமான, மனிதத் தன்மையற்ற கொள்கைகளையொட்டியச் சம்பவங்களே காரணமாகும்.

இயான்ஸ்மித், ஆப்பிரிக்கர்களுக்கு எதிரான தன்னுடைய அடக்கு முறைகளின் வெற்றிகரமான பிரதிபலிப்பிற்கு, பிரிட்டனின் ஒத்துழைப்பையே பெரிதும் நம்பியிருக்கிறார். ஆனால், பிரிட்டிஷ் அரசாங்கம், இயான்ஸ்மித்தைப்போன்ற குறுகிய மனப்போக்கும் — இனப்பற்றும் மிகுந்த ஒருவரின் ரகசியச் சதிகளுக்கு இசைந்து வருமா என்பதே கேள்வி! ஏனெனில், ஹெரால்டு வில்ஸன் ஜனநாயக நெறிகளுக்கும், நேர்மையான மனிதாபிமான குணங்களுக்கும் பெயர் பெற்றவர் என நம்பப்படுவதினால், காலனி ஆதிக்கத்திற்கு உட்பட்டுள்ள நாடுகளின் விஷயத்தில் அவரது நடவடிக்கைகள் தார்மீகமான முறையில் அமைந்திருக்கும் என எதிர்பார்க்கப்படுவது இயல்பே!

இயான்ஸ்மித் போன்றவர்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் ரொடீஷியாவின் சிக்கல் மிகுந்த நிர்வாகப் பிரச்னைகளுக்கு அரசியல் சட்ட சம்பந்தமான மகாநாடொன்றைக் கூட்டி அதில் பங்கெடுத்துக் கொள்ளும் ஆப்பிரிக்க மக்களின் உண்மைப் பிரதிநிதிகளையும் தற்போது அங்கு நிலவும் அரசாங்கத்தரப்பினர்களையும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மத்தியஸ்தர்களையும் சுமுகமான முடிவொன்றுக்குவரச்செய்வதே தகுந்த பரிகாரமாகும் என்பதில் தற்போதைய பிரிட்டிஷ் அரசாங்கம் கொண்டிருக்கும் நம்பிக்கையிலிருந்து ஸ்ரீ வில்ஸனிடம் நமக்குள்ள அன்பும் மதிப்பும் மேலும் கூடுகின்றது.

★

## போப்பாண்டவருக்கு திருக்குறள்

சில மாதங்களுக்கு முன்பு திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் தம்மால் மொழி பெயர்க்கப்பட்டுள்ள ஆங்கிலத் திருக்குறளின் பிரதியொன்றினை இந்தியப் பிரதமர் திரு. லால்பகதூர் சாஸ்திரி மூலமாக ரோமாபுரியிலுள்ள கத்தோலிக்க மதகுருவாகிய பரிசுத்தமிக்க போப்பாண்டவராகிய 4வது பயஸ் என்பவருக்கு அன்புப் பரிசாக அனுப்பியிருந்தார். அந்தப் பரிசினைப் பெற்றுக் கொண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்ததாகப் போப் ஆண்டவரிடமிருந்து திருவாசகமணிக்குப் பதில் வந்துள்ளது.

## பணியாளருக்கு திருமணம்செய்து வைத்தார்காமராஜ்

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜூக்குக் கடந்த 15 ஆண்டுகளாக அந்தரங்கப் பணியாளராக இருந்துவரும் ஸ்ரீ வைரவசாமிக்கும் செல்வி சண்முகவடிவுக்கும் கோவில்பட்டியில் 5-ம்தேதி திருமணம் நடைபெற்றது. இத்திருமணத்தை ஸ்ரீ காமராஜே நடத்திவைத்தார். திருமண அழைப்புகளை ஸ்ரீ காமராஜே தன் பெயரிலேயே அனைவருக்கும் அனுப்பியிருந்தார்.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒளி 30 | 11—7—1965 | வாரம் 33


# ஸ்ரீ சாரதா பீடம்

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்து சங்கராச்சாரியராக இன்று விளங்கும் ஸ்ரீமத் அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் திருச்சிக்கு எழுந்தருளியிருக்கிறார். ஸ்ரீ மாணிக்க விநாயகர் சந்நிதிக்குமுன்பு புதிதாக விஸ்தரிக்கப்பட்டுள்ள கல்யாணமண்டபத்தில் பூஜை செய்கிறார். பக்தகோடிகள் திரளாக வந்து தரிசிக்கிறார்கள். திருச்சி நகர் மன்றம் ராஜாங்க வறவேற்பளித்துக் கௌரவிக்கிறது. நாமும் பணிவுடன் வரவேற்பை அறிவித்துக்கொள்ளுகிறோம்.

இந்த சமயத்தில் காஞ்சி காமகோடி பீடத்தின் பக்தர்கள் சிலர் வெளியிட்டிருக்கும் விளக்க அறிக்கையொன்று நம் கவனத்துக்கு வந்தது. அதில் ஆதிசங்கரர் அமைத்த முக்கிய பீடங்களில் காஞ்சியும் ஒன்று என்பதை ஆதாரபூர்வமாக விளக்கியிருக்கிறார்கள். ஓய்வு பெற்ற மாவட்ட நீதிபதி ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதி அய்யர் திவான் பகதூர் ராமஸ்வாமி அய்யர் போன்ற மேன்மக்களின் கையொப்பம் தாங்கியுள்ளது இவ்வறிக்கை.

இந்த அறிக்கைக்குஇப்போது என்ன அவசியம்வந்தது என்று விசாரித்தபோது, சிருங்கேரி மடத்து ஆதரவாளர்கள் என்று கூறப்படும் அத்வைத சபையின் சார்பாக காஞ்சி காமகோடிபீடம் அதிகாரபூர்வமானதொரு பீடமன்று என்று பொருள்படும்படியானதொரு பிரசாரம் நடைபெற்றதாகவும் அதை மறுத்து ஆஸ்தீகர்களுக்குத் தெளிவுண்டாக்கும்படியாக இந்த அறிக்கை வந்திருப்பதாகவும் தெரிகிறது அத்வைத சபையாரின் பிரசார அறிக்கையென்று கூறப்படுவது எதுவும் நமது பார்வைக்குக் கிடைக்கவில்லை.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் அதிகாரத் தகுதியைப்பற்றி விசாரிக்க வேண்டிய அவசியம் எதுவும் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. ஆதிசங்கரர் அமைத்த மடங்களில் ஒன்று அல்லவா என்ற பிரச்சாரத்துக்கும் பொருள் கிடையாது. நூற்றாண்டுகளாக அது இயங்கி வந்திருப்பதும், பீடாதிபதிகள் பரம்பரை ஒன்று அமைந்து லட்சக்கணக்கான குடும்பங்கள் அதற்குப் பக்திபூண்டு பயனடைந்து வந்திருப்பதே ஸ்ரீ காஞ்சி பீடத்திற்குப் பெருமையளிக்கப் போதுமானது.

தவிர, இன்று காஞ்சிபீடத்தை அலங்கரிக்கும் முனிபுங்கவர் ஜனகனைப் போன்றும் சுகப்பிரம்மத்தைப் போன்றும் கலியில் கண்முன் காட்சியளிக்கும் தேவபுருஷர் என்பதை மறுக்கும் தகுதி யாருக்குமில்லை. அவர்களது அருள்மொழிகளும் சமூகத்தில் சமய உணர்வும் இறை நெறியும் பரவ அவர்கள் அவ்வப்போது காட்டி வருகின்ற ஒளியும் நம்முடைய நாட்டுக்குச் சிறந்த மங்களத்தைச் செய்து வருகிறது. பீடம் என்ற பெயருக்கே ஒரு மகிமை உண்டு. அதுவும் பீடாதிபதிகளான பெரியவாளுடைய மனம் நோகும்படியான காரியத்தைச் செய்வது மகாபாவமாகும். நம்மைக் கேட்டால் எந்த எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், அதற்கு மறுப்புக்கள் வெளியிடாமல் இருந்து விடுவதால் ஸ்ரீ காஞ்சி பீடத்தின் மகிமைக்கு ஒரு குறைவும் வராது.

ஆஸ்தீகம் பொது லட்சியமாக இருக்கவேண்டிய நேரத்தில் இப்படிப் பிளவுகளை இரு பீடாதிபதிகளுமே விரும்பமாட்டார்கள் என்பதில் நமக்கு ஐயமில்லை. பக்த கோடிகள் பிரிந்து நின்று வீணான சூழ்நிலைகளை உண்டாக்குவது அறிவுடைமையாகாது.

# கண்ணோட்டம்

— ரா. நா.

இந்தியா பாகிஸ்தான் உடன்பாட்டை பெருவாரியானவர்கள் வரவேற்கின்றனர். ஜனசங்கத்தலைவர்களும் லோகியா கோஷ்டியினரும் அதை எதிர்க்கின்றனர். ஆட்சியினர் எது செய்தாலும் அது தவறு என்று எண்ணுபவர்களிடமும், பாகிஸ்தானை அழித்துவிட்டு அதையும்பாரதத்தின்பகுதியாக்கிவிடவேண்டும் என்று எண்ணுபவர்களிடமும் வேறு எதையும் எதிர்பார்க்க முடியாது. ஜாதி, இன அடிப்படையில் அமைந்த கட்சியின்றி வேறு வகையில் செயல்பட மாட்டார்கள்.

காங்கிரஸ் எது செய்தாலும் அது தவறு என்று கூறும் சுதந்திரா கட்சித் தலைவர் திரு. ராஜகோபலாசாரியாரே இந்த ஒப்பந்தத்தை ஆதரிக்கிறார் என்றால் அதைத் ஏன் எதிர்க்க வேண்டும்? ஆனால் திரு. ஆச்சாரியார் எதையாவது ஆதரித்தால் அதில் ஏதோ சூது இருக்கிறது என்று கூறுவோரும் இருக்கின்றனர். இந்த சந்தர்ப்பத்தில் நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் எகிறிக்குதித்துக்கொண்டிருந்த பாகிஸ்தான் பணிந்துவிட்டதைக் கவனிக்க வேண்டும். அவர்கள் முன்னேறியிருந்த இடத்திலிருந்து பின்வாங்கத் தொடங்கிவிட்டனர். பாகிஸ்தானிகளின் ஆக்கிரமிப்பைத் தடுத்து பின் தள்ளுவதற்காக நம் படையினர் 14,000 அடி உயரமுள்ள மலைமீதேறி எதிரிகளை விரட்டியடித்தனர். இதற்காக பாகிஸ்தான் பகுதியில் புகவேண்டியிருந்தது. அவ்விடத்திலிருந்து நம் படைகள் பின் வாங்குகின்றன. நீடித்தசமரஸம்ஏற்படுவதற்காக ஓரளவு விட்டுக்கொடுத்தால் அதைத் தோல்வி மனப்பான்மை என்று கூற முடியாது. 14,000 அடி உயரம் ஏறி பாகிஸ்தானிகளை விரட்டியடித்ததனால் நம் பலத்தையும் தங்கள் பலவீனத்தையும் உணர்ந்து நமது அரசாங்கத்தை யாவரும் பாராட்டவேண்டும்.

ஃ ஃ

சேலம் உருக்காலை விஷயத்தில் திரு. சஞ்சிவரெட்டியின் சூழ்ச்சி பலித்துவிட்டது. முதலில் விசாகப் பட்டணத்திலும், அடுத்து ஹாஸ்பெட்டிலும் தான் உருக்காலை அமைக்கலாம் என நிபுணர்கள் தீர்ப்புக் கூறச் செய்து விட்டார். ஆனால் இந்த நிபுணர் அறிக்கை பற்றியும் அதை ஆதரிக்கும் மத்திய சர்க்கார் கருத்தையும் பார்த்துவிட்டு சென்னை ராஜ்யத் தொழிலமைச்சர் திரு. ஆர். வி கூறிய கருத்துக்களை மக்கள் மட்டுமல்ல மத்திய ஆட்சியினரும் நன்கு கவனிக்க வேண்டும் விசாகை கடலோரத்திலிருப்பதனால் கச்சாப் பொருள்கள் வந்து சேர வசதியாயிருக்கும் எனவும், சேலத்தில் அது உள் நாட்டிலிருப்பதனால் கனப் பொருள்கள் வந்து சேர வசதி குறைவு என்றும் நிபுணர் அறிக்கை கூறுகிறது.

ஆனால் அமைச்சர் ஆர். வி. கூறுவது என்னவெனில் விசாகையில் உற்பத்தி தொடங்க இன்னம் பத்து ஆண்டுகள் ஆகும் எனவும், சேலம் திட்டம் இன்னம் இரண்டு ஆண்டுகளில் செயல்படும் என்பதுதான். சேலம் திட்டத்தைப் பற்றி நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து முடிந்து விட்டது. இதற்கு ஜப்பானிய வர்த்தகக் குழு ஆதரவளிக்கத் தயாராயிருப்பதுடன் சேலம் திட்டத்தை உருவகப்படுத்துவதற்கான ஆரம்ப வேலை தொடங்க மத்திய அரசின் அனுமதியை அவர்கள் நாடியுள்ளனர்.

சேலம் உருக்காலை திட்டம் உருவாவதில் அன்னியச் செலாவணிக் கஷ்டம் ஏதும் இல்லை. ஜப்பானியரே முதலீடு செய்யத் தயாராயுள்ளனர். இரண்டு ஆண்டுகளில் வேலை தொடங்கிவிட்டால் தென் வட்டத்திற்கு மட்டுமின்றி இந்தியாவின் பிறபாகங்களுக்கும் சப்ளை செய்யலாம் என திரு. ஆர். வி. கூறுகின்றார். சென்னை அரசாங்கம் கேட்பது சேலம் திட்டத்திற்கு முதலிடம் என்பதல்ல. விசாகை, ஹாஸ்பெட் திட்டங்களை நிபுணர்கள் முடிவுப்படி நடத்துகையில் சேலம் திட்டத்தை உங்களுக்குத் தொந்தரவில்லாமல் அனுமதியளியுங்கள் என்பது தான்.

இவ்விஷயத்தில் காங்கிரஸ் அதிபர் காமராஜும் பிரதமர் லால்பஹதூரும் கவனம் செலுத்தி தமிழகத்திற்கு நியாயம் வழங்க வேண்டும்.

# பகைச் சூழல்

எல்லையில் நம்மைக் கவிந்து கொண்டிருந்த பாகிஸ்தானுடன் இப்போதைக்கு ஒரு அமைதி ஏற்பாடு உண்டாகியிருக்கிறது. அதன்படி போர் நிறுத்தம் உண்டாகி இருதரப்புப்படைகளும் தத்தம் இடத்திற்குத் திரும்பி விட்டன.

எந்தநாளும் நமது பிரச்னைகளைப் போர்ப்புகையில்லாமல் சமாதானமாக அமர்ந்து பேசித்தீர்த்துக்கொள்ள ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ள முன்வருமாறு பாகிஸ்தானுக்கு நமது பிரதமர் வேண்டுகோள் விடுத்துள்ளார். பாகிஸ்தான் அப்படி முன்வருமானால் இரண்டு நாடுகளுக்கும் பெரும் பயன் உண்டு. தங்கள் சக்தியை முழுவதும் ராணுவத்திற்குச் செலவிட்டு உள்நாட்டில் மக்களின் வாழ்க்கை வளத்திற்கு வேண்டிய பொருளாதாரத்தை வீணாக்குவதை விட்டு, இருநாடுகளும் வலிமைபெறுகின்ற வாய்ப்பு உண்டாகும்.

நூற்றாண்டுகளாக ஒரு நாட்டினராக வாழ்ந்த மக்கள் இரு கூறுகளாகப் பிரிந்து எல்லைத் தொல்லையில் மாட்டிக்கொள்வதால் இருநாடுகளும் பெருத்த நஷ்டமேயடையுமென்பதை பாகிஸ்தான் உணர வேண்டும்.

# நடக்கும் விளையாட்டு

மழை 'சோ' வென்று பெய்கிறது. சாதாரண நாளில் யாரும் வெளியே தலைகாட்ட மாட்டார்கள். ஆனால் காலை 4-30 மணிக்கு போட்டி ஆரம்ப இடத்தில் 100 பேர் குழுமியிருக்கின்றனர்; 6 மணிக்கு ஆயிரக் கணக்கில் திரண்டுவிட்டனர். குடைகள், மழைக் கோட்டுகள், மழைப்பூச்சுகள் சகிதம், லேசாகப் பாடியவாறு கூடியிருக்கின்றனர். 8184பேர், நடக்கும் போட்டியில் பங்கெடுத்துக் கொண்டு நடக்கத் தொடங்கிவிட்டனர். கொட்டும் மழையில் வீறு நடைபோட்டு நடந்து சென்றதால் கால்கள் வீங்கி வேதனைதந்தாலும் பொருட்படுத்தாமல், 50 கிலோ மீட்டர் நடந்து சென்ற 5,580 பேர்களுக்கு தங்கப் பதக்கம் கிடைத்தன.

மூனிச் நகரப் பத்திரிகை ஒன்று, இந்த ஆண்டில் மூன்றுவது முறையாக 'ஸ்டார்ன் பர்க்' ஏரியைச் சுற்றி நடத்தல் போட்டியை நடத்தி வருகிறது. முதல் ஆண்டில் 400 பேர் கலந்து கொண்டனர். சுமார் 5,000 ரசிகர்கள் இதைப் பார்க்க வந்திருந்தார்கள்.

ஆனால் இம்முறை 10000 பேர் திரண்டு விட்டனர். 'பென்ஷன்' வாங்கும் கிழவர்களும், பாடகர்களும் இப்போட்டியில் கலந்து கொண்டார்கள் ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ள செஞ்சிலுவைச் சங்க முகாம்களில் 'புண்பட்டுப்போன' கால்களுக்கு மருந்துதடவி துணி கட்டுவதில் பலர் உதவி செய்தனர். 50 கிலோ மீட்டர் தூரத்தை இம்முறை 5 மணி 58 நிமிட நேரத்தில் நடந்தார்கள்.

பதக்கங்களும், விருதுகளும் கொடுப்பதின் மூலம் மறந்துபோன 'நடக்கும்' விளையாட்டுக்கு மீண்டும் புத்துயிர் ஊட்டலாம் என டாக்டர்களும், சுகாதார அதிகாரிகளும் நம்புகிறார்கள். மூன்றுண்டுகளுக்கு முன்பு சிலர் ஒன்று சேர்ந்து 'நடப்பவர்கள் சங்கம்' ஒன்றை நிறுவினார்கள்.

ஓராண்டில் 300 மணி நேரம் நடந்ததாக எழுதி வைத்து நிரூபிப்பவர்கள் இந்த சங்கத்தில் மெம்பராகலாம். உற்சாகமாக நடப்பவர்களுக்கு சிறு 'பின்' மற்றும் விருதும் வழங்கப்படும். 'தங்க பூட்ஸ்' பொறிக்கப்பட்ட ஒருலேபிள் தரப்படும் பின்னின் தங்க அளவு சிறிதே என்றாலும், மதிப்பு அதிகம். 24,000க்கும் அதிகமான மேற்கு ஜெர்மனியாளர்கள் 'தங்க பூட்ஸ்' பின் வாங்கியுள்ளனர்.

★

இரண்டாம் பாகம் ]



[ பள்ளியில்

# உத்தமன் முத்து

திருச்சி பாரதன்

### 17. பிரார்த்தனை

பள்ளி மணி அடித்தது!
பசுவின் கன்று போலவே
துள்ளி துள்ளி மாணவர்
பள்ளி அறையை நாடினர்!

வரிசை வரிசை யாகவே
வந்து அணியில் நின்றனர்!
பெரிய முற்றந் தன்னிலே
பிரார்த் தனைக்குக் கூடினர்!

'இறைவா! இறைவா! காத்திடு!
இந்த உலகைக் காத்திடு!
அறமும் பொருளும் இன்பமும்
அமையச் செய்து உதவிடு'

கண்கள் மூடி வணங்கினர்!
கரங்கள் கூப்பி வணங்கினர்!
பின்னர் தங்கள் வகுப்பிலே
பெரும்ப டைபோல் நுழைந்தனர்!

### 18. கேலிப்படம்

ஆங்கிலப் பாடம் முதலிலே!
ஆசிரியர் ஆறல் தாமதம்!
ஓங்கிடும் குறும்பு கொண்டவன்
உத்தி ராபதி எழுந்தனன்!

கரிய பலகை மீதிலே
கவர்ச்சி கேலி கலந்தவன்
பெருமைக் குரிய ஆசிரியர்
போன்ற உருவம் வரைந்தனன்!

கண்ட மாணவர் சிலரதில்
கைகள் கொட்டிச் சிரித்தனர்!
'நன்று' என்று போற்றியே
நாசச் செயலை ரசித்தனர்!

முத்து கண்டான் முகத்திலே
முற்றக் கண்டான் கோபமே!
கத்துங் கடலின் அலையென
கர்ஜனை செய்தான் அக்கணம்!

### 19. பெருந்தெய்வம்

அறிவு தந்து வளர்த்திடும்
ஆசிரி யர்க்கோ கேவலம்!
இறைவன் போன்ற அவரையே
இழிவு செய்ய முடியுமோ?

நம்மை நாமே காழ்த்திடும்
நன்றி கெட்ட செய்கைகள்
இம்மி யளவு இருப்பினும்
எடுத்து வீசி எறிகுவோம்!

என்று முத்து சொன்னதும்
ஏற்றுக் கொண்டார் அனைவரும்!
பண்பை அறியா உத்திரா
பதிதான் உள்ளம் குமுறினன்!

வந்து சேர்ந்தார் ஆசிரியர்!
வகுப்பில் பாடம் துவக்கினர்!
சிந்தை ஒன்றி முத்ததைச்
சிறப்பாய் ஊன்றிக் கேட்டனன்!

### 20. காப்பி அடிக்காதே!

பறவை பறந்து செல்வதைப்
பார்த்தான் பாலு சன்னலில்
'நறுக்'கென முத்து கிள்ளியே
நன்கு 'புத்தி' புகட்டினன்!

அடுத்த பாடம் கணக்குதான்!
அதிக மாணவர் பிணக்குதான்!
வைத்த தேர்வு புரியாமல்
விழித்தான் கந்தன்! மண்டுதான்!

"காப்பி அடிக்க உதவிடு!
கனிவாய் முத்து உதவிடு!
காப்பி வாங்கி தருகிறேன்
கருணை கொண்டு உதவிடு!"

என்று கேட்டான்! சேச்சே!
இதற்கு உதவ மாட்டேன்!
நன்மை அல்ல இதுவென
நயமாய் முத்து உரைத்தனன்!

### 21. கந்தன் தெளிந்தான்

முத்து சொன்ன மொழிதனை
மூடன் கந்தன் உணர்ந்தனன்!
சித்தந் தெளிந்தேன் இனிமேல்
சிறப்பாய்ப் படிப்பேன் என்றனன்!

தமிழின் பாடம் வந்தது!
தனித்த இன்பந் தந்தது!
அமுத பதிலை அளித்தனர்
ஆசி ரியரின் கேள்விக்கே!

வகுப்பில் முதல்வன் முத்துதான்!
வகுப்பின் தலைவன் முத்துதான்
தகுதி மிகுந்தோன் ஆதலால்
தகுந்த மதிப்பு பெற்றனன்!

அவனைப் போலே சிறந்திட
ஆவல் கொண்டோர் பற்பலர்!
அவனைப் போலே பொறுப்புகள்
அறிந்து நடப்போர் இல்லையே!

### 22. ஆலமரத்தடியில்...

காலைப் பொழுது மறைந்தது உச்சியை
கதிரவன் அடைந்துவிட்டான்
'கணகண' என்றே மணியும் ஒலித்தது!
காற்றில் கலந்ததுவே!
காலை வகுப்புகள் முடிந்தன மாணவர்
கடுகி விரைந்துவந்தார்!
கைகளில் இருந்த உணவினை உண்ண
இடமும் தெரிந்தெடுத்தார்!

பள்ளி மைதானம் ஓரந் தன்னில்
பழைய ஆலமரம்!
பற்பல வருடம் மாணவர் உறவைப்
பார்த்து மகிழ்ந்தமரம்!
உள்ளம் கூடி அதன்கீழ் அமர்ந்து
உண்டிட அருளும்மரம்!
ஓடியே வந்தனர் முத்துவும் பாலுவும்
உணவைப் பிரித்தனரே!

### 23. பசி எடுத்தது

ஏழை பாலுவின் பாத்தி ரத்திலே
இரண்டே இட்டலிதான்!
இதற்குமேல் கிடைக்க வழிகள் இல்லை!
என்ன அவன்செய்வான்?
நீள மான இலையில் பாதியை
நீட்டினன் முத்துவுமே!
நேர்த்தி யாக கொணர்ந்த உணவில்
நேசமாய்ப் பகிர்ந்தளித்தான்!

லட்டு மிட்டாய் புளியோ தரையுடன்
ரசிக்கும் தயிர்சாதம்!
ரொட்டியுங் கூட இலையில் விழுந்தன!
நொடியில் தீர்ந்தனவே!
திட்ட மிட்டே ஒருவருக் கென்றே
தந்த உணவன்றோ?
தெரிந்தே இருவரும் பகிர்ந்தே உண்டனர்!
தீவிரப் பசிகண்டார்!

### 24. காசு கரைந்தது!

பசியைப் போக்கும் வழிதான் என்ன?
பார்த்தான் சட்டையிலே
பதித்த சிறுபை! அதிலே காசுகள்
பரவிக் கிடந்தனவே!
இனிக்கும் குணத்து அப்பா காலையில்
இனிதாய் அளித்ததன்றோ?
எத்தனை உதவி என்றே முத்து
இதயம் பூரித்தான்!

அருகில் சிறிய கடையொன் றிருந்தது!
அதனில் பாலுவுடன்
ஆவேசப் பசியும் உந்திட முத்து
ஆர்வமாய் நுழைந்தனனே!
அருமை யான பழங்கள் உண்டனர்!
காசுகள் கரைந்தனவே!
ஆர்ப்ப ரித்த பசியும் பறந்தது!
அழகாய்ச் சிரித்தனரே!

[ தொடரும் ]

## கண்டம் விட்டுக் கண்டம் செல்லும் பறவைகள்

பலவகையான பறவைகளும் நாடுவிட்டு நாடு, குறிப்பிட்ட காலத்தில் குடியேறுகின்றன என்பது தெரிந்ததே. இவை அவ்வாறு செல்கையில் ஒரு குறிப்பிட்ட பாதையிலேயே செல்கின்றன. பல பறவைகள் செல்லும் பாதையின் அளவுப் பாடங்களை லெனின்கிராடு பறவையியல் வல்லுநர்கள் வரைந்துள்ளார்கள்.

கடந்த ஏழாண்டுகளில் சோவியத் விஞ்ஞான அக்காடாமியைச் சேர்ந்த ஆராய்ச்சி நிபுணர்கள், ஏறக்குறைய மூன்று லட்சம் பறவைகளுக்கும் மேலாக, 'வளையமிட்ட'னர், ('வளையமிடுதல்' என்பது ஒருபறவையின் காலில், அடையாள வளையம் ஒன்றை மாட்டி, பின்னர் அப்பறவை எந்த நாட்டிற்குச் சென்றுள்ளது என்பதைக் கண்டுபிடிப்பது.) இதற்கென பால்டிக் கரையில் ரைப்பாச்சி குடியிருப்புக்கருகே ஒரு சாதனம் பொருத்தப்பட்டு உள்ளது. உயரமான கழிகளில் மாட்டப்பட்டுள்ள வலைகளில் பறவைகள் கிக்கிக்கொள்கின்றன. அவை உடனே எந்த இனத்தைச் சேர்ந்தவை என்பது ஒரு புத்தகத்தில் குறிக்கப்பட்ட பின்னர், ஒரு சிறிய அலுமினிய வளையம் அதன் காலில் மாட்டப்பட்டு, விடுவிக்கப் படுகின்றன. வளையமிடப்பட்ட ஒரு பறவையை உலகின் எந்த மூலையில், ஒரு பறவையியல் விஞ்ஞானி கண்டாலும், உடனே அந்த வளையத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விலாசத்துடன் அவ்விஞ்ஞானி தொடர்பு கொள்வார்.

இந்த முறையின்மூலம், பல ருசிகரமான தகவல்கள் கிடைத்துள்ளன. உதாரணமாக, ரைப்பாச்சியில் முதல் நாள் வளையமிடப்பட்ட ஒரு பறவை மறுநாள் பெல்ஜியத்தில் பிடிக்கப்பட்டது. 24 மணி நேரத்தில் அது 1300 கிலோமீட்டர்கள் பறந்துள்ளது. குறிப்பிட்ட காலத்தில் கண்டம் விட்டுக் கண்டம் பறக்கும் இந்த இயற்கையின் செல்வங்கள் எவ்வாறு வழிகண்டு பிடித்துச் செல்கின்றன என்பதை ஆராய்ந்தறிந்தால், அதன் அடிப்படையில் மனிதனும் ஒரு சாதனத்தை அமைக்கலாம் அல்லவா? இயற்கையன்னையிடமிருந்து எத்தனையோ வடிவமைப்புக்களை மனிதன் தான் ஏற்கனவே 'காப்பி'யடித்திருக்கிறானே!

★

# விருதை வீரர்!

★

'நேருக்குப் பின்யாரோ?' என்றுகேட்டார்
யாருக்கும் அற்றைநாள் புரிய வில்லை!
பாருக்குப் பிறந்திட்ட காம ராஜர்
நேருக்கு நேரானர் - இன்று சொல்வோம்.
நேருக்குப் புகழ்தந்த உழைப்புச் செல்வம்
நிமிர்ந்தநடை விருதுநகர்ச் செம்மல் கொண்டார்
பேருக்குப் பதவியினை விரும்பி டாமல்
பிறந்தமண்ணைப் பேணிடற்கே உறுதி பூண்டார்!

புயவலிமை மதிவலிமை காலம் பார்க்கும்
புதுவலிமை எலாம்பெற்றுர் காம ராஜர்!
'செயல்முன்னே சொல் பின்னே!' என்று சொல்லி
தேயத்தின் இதயம்போல் திகழு கின்ருர்!
வயற்குழந்தை காக்கின்ற உழவன் போல
வளர்கின்ற பாரதமண் பேணு கின்ருர்!
உயர்மனிதர்! உள்ளத்தால் உயர்ந்த ஏந்தல்!
ஒப்பற்ற பெருந்தொண்டர் விருதை வீரர்!

'குடியுரிமைச் சமநெறி'யை இந்தியத் தாய்
குறிக்கோளாய் ஆக்கிடவே துடிக்கும் அண்ணல்!
மடிமிகுந்த பாரதத்தில் வளங்கள் மல்க
வற்றுத செயல்புரியும் கொள்கைச் செந்தூண்!
உடுக்கவுடை இருக்கஇடம் உண்ணச் சோறு
உயிரின்கண் செழுங்கல்வி பாரதத்தார்
இடுக்கணிலா முறைதன்னில் பெற்றி டற்கே
எப்போதும் பணியாற்றும் ஏழைத் தோழர்!

பாரதமண் நேருமகன் இழந்த காலை
படிக்காத மேதைதான் நம்மைக் காக்க
மார்தட்டி முன்வந்தார்! புகழ்ச்சி யில்லை!
மறையாத சரித்திரத்தை இந்த மண்ணில்
ஊர்போற்றும் விருதைமகன் நிலையாய் நாட்டும்
உண்மையினைச் சொல்லித்தான் தெரிய வேண்டும்?
கார்காட்டி வளங்காட்டும் இயற்கை போல
கருத்துவழி காட்டுகின்ருர் காம ராஜர்!

வரலாற்றின் பொன்னேட்டில் காம ராஜாம்
வயிரமணி எழுத்துக்கள் ஒளிரக் காணிர்!
வரம்பெற்ருள் பாரதத்தாய்! காம ராஜர்
வண்டமிழர் திருநாட்டில் பிறப்பெ டுத்தார்!
'உரம்பெற்றோம்!' என்று சொல்ல் காம ராஜர்
உதித்திட்டார்! உய்கின்ற வழிதந் திட்டார்!
கரம் பெற்ருேம் அக்கரமே காமராஜர்!
கரங்காட்டும் ஒளிப்பாதை நடந்து வாழ்வோம்!

தொண்டென்று சொல்லுங்கால் காமராஜர்
தூயமனம் நம்முன்னே மிளிர்ந்து நிற்கும்!
உண்டென்ற சொல்லொன்றே நின்று வாழ
உயர்ந்தசம தர்மத்தூண் நாட்டி விட்டார்!
பண்டிருந்த பாரதிதான் இன்றி ருந்தால்
பார்போற்றும் விருதுநகர் வீரர் செய்யும்
கண்டுநிகர் செயல்களினைப் பாடிப் பாடிக்
களித்திடுவான்! 'உண்மைவெறும் புகழ்ச்சி யில்லை?'

நிறம்கறுப் பு யானும் உள்ளம் வெண்மை!
நேருசென்ற பாதையிலே செல்லும் நேர்மை!
அறங்கண்ட வள்ளுவர்போல் சில சொற் பேசி
ஆட்சியினை நடத்துகின்ற செயலின் வீரர்!
உரஞ்சான்ற கருத்தினை உள்ளங் கொண்டே
ஓயாமல் உழைத்ததனல் உயர்வைப் பெற்ருர்!
அருள்தன்னைக் குழந்தையெனப் பேணு கின்ருர்
அன்னைமண் காக்கின்ருர்; அவர்தான் வாழி!

—புலவர் முத்து வேங்கடேசன்

# கொல்லிமலைக் காடுகளில்...



சட்டுரையை முடிக்கு முன்பு இந்தப் பிரயாண காலத்தில் நான் உணர்ந்த ஒரு சிலவற்றை எழுதாமல் விட்டால் நான் எழுத்துத் துரோகம் மட்டுமல்ல-கருத் துத்துரோகம் செய்தவனு மாவேன்!

காட்டு வழியில் நானும் சரி-எனக்குக் கிடைத்த கோஷ்டி நண்பர்களும் சரி தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்றபோது குறுக்கிட்ட 'ஜீப்'கள் — இடவசதியிருந் தும் எங்களுள் — நடக்க முடியாத ஒருவர் இருவரை சிறுமியை - முதியவரைச் சுமந்து செல்லலாம் என்று நினைக்கவில்லை. 1961ல் அமைச்சர் அவர்களால் திறந்து வைக்கப்பட்ட பக் காக்கட்டிடம்- சோளக்காடு பங்களா அதில் நேரிடை யாகக் கோரவிரும்பா விட்டாலும் என்னிடம் பரிவு காட்டி என்னையும் அதில் இரவு குளிருக்குப் பாதுகாப் பாகத் தங்கச்செய்யலாம் என்று எண்ணிய மனிதாபி மானக் கருத்துக்கு அங்கே மதிப்பில்லை. புலிக்காட்டில் பங்களா அமைந்தாலும் காட்டுப்புலியின் மனப்பான் மையே அமைய வேண் டுமா?... பணங்காசு செலவு செய்து— அதிகாரத் தர்பார் செய்ய வகையுள்ளவர்க்கு மட்டுமே சரணலயமாக இத்தகைய பங்களாக்கள் இருக்கவேண்டு மென்பது ஜனநாயகசோஷலிஸத் தின் தலை எழுத்தா?

வழிதப்பிக் கால் சோர்ந்து நிலைகெட்டு — பஸ்தவறி நள்ளிரவெல்லாம் அந்தக் காட்டுப் பகுதியிலே தங்க நேர்ந்துவிட்ட ஒரு தரைவாசி நபருக்கு அவர் எழுத்தாளராக இல்லாம லிருந்தாலும் பெரிய அந்தஸ் துக்குரியவரா யில்லா விட்டாலும் அந்தப்பங்களா வின் ஒரு மூலையில் இடம் கிடைக்கக்கூடாதா?...

ஐயா!... இதை எனக்காக எழுதவில்லை-எழுத்தாளரை மட்டுமல்ல — பணவசதி படைக்காத எந்த மனிதரை யும் இந்த வெளியுலகம் மதிக்கவில்லை என்பதை உணர்த்தவேஎழுதுகிறேன் தமிழ் நாட்டின் மூலை முடுக் குகளிலுள்ளகோடைவாசஸ் தலங்களாக்களிலெல்லாம் தமிழ்கூறும்நல்லுலகத்தைச் சேர்ந்த ஒரு பிரதிநிதியை வைத்து அவரைக்கொண்டு ஆவன வெல்லாம் செய்ய எங்கள் திருச்சித்தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்தால் இயலும். எழுத்தாளனை அவன் எந்தப் பத்திரிகை யில் எழுதுகிறவனுயிருந் தாலும் எப்படி மதிக்க வேண்டும் என்பதை இவ் வுலகத்திற்கு உணர்த்த இயலும்... எனினும் நான் பணிவன்புடன் பங்களா வாசிகளைக் கேட்டுக்கொள் கிறேன். எம்போன்றவர் யாராவது இரவில் பஸ்ஸில் இடம் கிடைக்காமல் தங்க நேர்ந்தால் அவர்களை வலு வில் விசாரித்துப் பாதுகாப் பாகத் தங்கியிருந்து செல்ல அழைக்கும் மனப் பக்குவத்தை உங்கள் கற்கோட்டைகளில் வளருங் கள்!

நான் 'டீ' குடிக்கச்சென்ற போது கடையின் உரிமை யாளர் திரு T.R. ரெட் டியார் என்னைப் பற்றி விசாரித்ததுடன் நில்லாமல் இரவு தம் கடையிலேயே தங்கிச்செல்லலாம் என்று ஆதரவு காட்டினுர்.

எனக்காக உப்புமா தயாரித்து அளித்த பின்பு பேசுகையில் அவர் தம் தமிழ்ப் புலமையை நன்கு வெளியிட்டார்- அறநெறிப் பற்றும் அறிவியலார்வமும் படைத்த திரு ரெட்டியார் தொட்டியத்தைச்சேர்ந்தவ ரென்றும் துறையூரில் என் மதிப்புக்குரிய ஆசிரியநண் பர்கள் திரு லக்ஷ்மணரெட்டி யார் மற்றும் திரு முத்து நல்லப்பரெட்டியாருக்கு நன்கு அறிமுகமானவரென் றும் பின்பு அறிந்தேன்.

ஏற்காட்டு மலையின் குளிரை நினைவுறுத்தும் குளிர்காற்றுஎன்மேனியைத் தழுவ, நடந்த களைப்பால் நான் கண்ணயர்ந்தேன்! மீண்டும் ஒருமுறை அல்லது பலதடவை நான் கொல்லிமலைக்குச் செல்லும் வாய்ப்பைப் பெறலாம். அப் போது நான் பங்களாவில் தங்க முடிந்தாலும் என்னைப் பரிவோடு வரவேற்று உபசரிக்கும் அன்புள்ளம் படைத்தவர்களின் குடிசை களில் அவசியம் தங்கு வேன்!

கொல்லிமலையின் ஒரு சில பகுதி மட்டும் கண்டநான் இந்தக்கட்டுரைத் தொகுப் பில் நான் உணர்ந்தவை களைத் தொகுத்துத்தர முயன்றேன். யாரோ சொன் னுற்போல் சொற்கள் என் கருத்தை மறைக்கத்தான் பயன்பெறுமோஎன்னவோ? விடைபெறுகிறேன்!

இலக்கிய மேதை

# தாமஸ்மான்

பத்து ஆண்டுகளுக்கு முன்பு ஆகஸ்டு 12-ம் தேதி, 20-ம் நூற்ருண்டின் முற் பகுதியின் தலைசிறந்த ஜெர் மன் எழுத்தாளர் கால மானுர். அவர் பெயர் தாமஸ் மான். 80வது பிறந்த நாளை கொண்டாடிய இரண்டு மாதங்களுக்குப் பிறகு தாமஸ்மானின் சொந்த வாழ்க்கைக்கு, மரணம் முற் றுப்புள்ளி வைத்தது.

மார்சல் பிரௌஸ்ட், ஆண்டரீ கிடே, ஹென்றி ஜேம்ஸ்போன்றதலைசிறந்த அறிஞர்களுடன் ஒப்பிடக் கூடிய அளவுக்கு தாமஸ் மான் படைப்புகள் கற் பனை வளமும், முக்கியத் துவமும் வாய்ந்தவைகளாக அமைந்திருந்தன. ஆனுல் ஒரு அம்சத்தில் வித்தியாசம் இருந்தது. தாமஸ்மான் படைப்புகள் ஆரம்ப முதல் இறுதிவரை ஒவ்வொன்றும் நன்கு திட்டமிட்டு சீராக அமைக்கப்பட்டு, வடிக்கப் பட்டவை. எல்லாவற்றிலும் இழைந்தோடிய ஒரு அடிப் படை அம்சம்: கலை, சிதைவு; சுகம், சாவு; அற் புதம் அற்பம் இவை பின் னிப் பிணைந்திருந்தன.

பிரபுக்களுக்கும் பாமர மக் களுக்குப் இடையேயுள்ள வேறுபாட்டினை தெளிவு படுத்துவதே, இதன் நோக் கம். சாதாரண வணிகர் குடும்பத்தில் பிறந்தவராத லின் தாமஸ்மான், சிறுவயது முதல் இந்த சிக்கலை நன்கு உணர்ந்திருந்தார்.

சிறுவயதில் பள்ளிக்குப் போவதில் தாமஸ்மானுக்கு அவ்வளவு நாட்டம் இல்லை. உண்மையில் சொல்லப் போனுல் அவர் பள்ளிப் படிப்பை முடிக்கவேஇல்லை. தாதலில் மூனிச் நகரில் இன் சூரன்ஸ் ஏஜண்டாக வேலை பார்த்தார். 19 வயதிலேயே அவர் நாவல் எழுதத் தொடங்கினுர். ரோம் நகரில் தங்கியிருக்கும் போது அவர், தமது பிர சித்தி பெற்ற 'தி புட்டன் புரூக்ஸ்' நாவலின் முதல் அத்தியாயத்தை எழுதினர் இதைத் தொடர்ந்து அவர் பெயர் பெற்ருர்.

இதைத் தொடந்து அவர் எழுதிய நாவல்களும், சிறு கதைகளும் கட்டுரைகளும் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டன. 1929-ம் ஆண்டில் அவ ருக்கு நோபில் பரிசு வழங் கப்பட்டபோது, அவர் புகழ் ஏணியின் உச்சிக்கே சென்றுவிட்டார். அவரது படைப்புகளுக்கு பாராட்டு தல் மட்டும் கிடைக்க வில்லை.

பிரபுத்துவ முறையின் உயர்வையும் தாழ்வையும் அடிப்படையாகக்கொண்டு அவர் படைத்த படைப்பு களில்சித்தரித்தமனிதனின் சிறப்பான குண விசேஷங் கள் நிரந்தரமாக நிலைத் திருக்கக்கூடியவை. தாமஸ் மானின் பேனு, மிகவும் வலிமை வாய்ந்தது. சமு தாய சீர்திருத்தத்திற்காக அவர் போராடினுர். மனித குலத்தை நாசப்படுத்துகிற 'படுகுழிகள்' என்ன என் பதை அவர் தெளிவுற விளக்கினுர். (யூ.பீ.எஸ்.)

# மேற்கு ஆப்பிரிக்க நாடுகள்

கடந்த 6 மாதங்களாகப் பொதுவாக ஆப்பிரிக்கா நாடுகளின் அரசியல் நிலைகளில் விசேஷ மாறுதல்கள் தோன்றி வருவது அறிந்ததே. அண்மையில் லாகோஸ்நகரில்ஆப்பிரிக்க ஐக்கிய ஸ்தாபன நாடுகளின் அன்னிய நாட்டு அமைச்சர்கள் கூடி நடத்திய விவாதத்தை, இதற்கு முன்பு இத்தகைய அந்த ஸ்தாபனத்தின் கூட்டங்களில் நடந்த விவாதங்களுடன் ஒப்பிட்டால் சமீபத்தில் நடந்த கூட்டத்தின் விசேஷம் நன்கு புலப்படும். இப்பொழுது நடந்த கூட்டத்தில் கனுவின் வெளிவிவகார மந்திரி கோஜோ போட்ஸியோவை இதர நாட்டு அமைச்சர்கள் ஓர் கடும் விவாதத்தில் ஈடுபடுத்தி அவருக்குத் திகைப்பு ஊட்டினார்கள் என்று சொல்லப்படுகிறது. இக்கூட்டத்தில் கனுவுக்கு அல்ஜீரியாவிலிருந்தோ அல்லது டான்ஸானியாவிலிருந்தோ ஆதரவு கிட்டியது என்று இருந்த போதிலும் டாக்டர்என்குருமாவின் கொள்கைகளினால் அவர் மேற்கு ஆப்பிரிக்காவில், இதர நாடுகளினால் எவ்வளவுக்கு ஒதுக்கப் பட்டுள்ளார் என்பது நன்கு புலப்படும்.

சென்ற பிப்ரவரி மாதம், மௌரிடானியா என்ற நாட்டின் தலைநகராகிய நௌவாக் சோட்டில், பிரெஞ்சு மொழி பேசும் ஆப்ரிக்கா நாடுகளின் தலைவர்கள் ஒன்று கூடி நடத்திய ஓர் கூட்டத்தில்; மேற்கு ஆப்ரிக்கா நாடுகளில் தோன்றிய புதிய அரசியல் நிலை நன்கு வெளிப்பட்டது.

நௌவாக் சோட் கூட்டம் முடிந்த பிறகு, வெளியிட்ட அறிக்கை' பொதுவாக ஆப்ரிக்காவில் சமாதானம் நிலை பெற்று முன்னேற்றம் அடைய வேண்டுமென்றால், ஒரு நாடு மற்றொரு நாட்டின் உள் விவகாரங்களில் தலையிடாமல் இருப்பது இன்றியமையாதது' என்று கூறியது. சில ஆப்ரிக்கா நாடுகள், அண்டை நாடுகளில் சதி வேலைகளில் ஈடுபட்டு வருவதைச் சுட்டிக்காட்டி அவ்வறிக்கை அதற்குக்கண்டனம்தெரிவித்தது. இத்தகைய நாடுகளில் குறிப்பிடத்தக்கது கனுவென்றும், இந்நாடு சதி வேலையில் ஈடுபடுவதற்கு வேண்டிய பயிற்சிகளை தன் நாட்டில் அளித்து, சதிவேலைக் காரர்களை அண்டை நாடுகளுக்கு அனுப்பி வைக்கிறது என்றும் கூறியது. நௌவாக் சோட் கூட்டத்தில் நிறைவேற்றிய திட்டத்தையொட்டி ஓ.ஸி.ஏ.எம் என்ற ஓர் ஸ்தாபனம் உருவாக்கப்பட்டு அதன் தலை அலுவலகம் காமரூன் என்ற நாட்டின் தலை நகராகிய யாவுண்டேயில் நிறுவப்பட்டது. இந்த ஸ்தாபனம் உருவாகியதற்குப் பெருத்த அளவு பங்கு கொண்டவர் ஐவரி கோஸ்ட்டின் ஜனாதிபதி ஹௌஃபௌஏ பாய்னி. இந்த ஸ்தாபனத்திற்குப் பாரீஸ் நகரத்திலிருந்தும் போதிய அளவு ஆதரவு கிட்டியுள்ளது. இந்த ஸ்தாபனம் டாக்டர் என்குருமாவின் கொள்கைகளுக்கு எதிர்ப்பு காட்டுவதற்குத் தோன்றிய ஓர் சின்னம் என்று அரசியல் அறிஞர்கள் கூறுகிறார்கள்.

இன்று காங்கோவிலுள்ள லியோபோல்டுவில் நகர் உலக நாட்டு மாறுபட்ட அரசியல் கொள்கைகள் பரஸ்பரம் போரிடுவதற்கு உபயோகிக்கப் படும் ஓர் போர்க்களமாக உருவாகுவதை, பிரெஞ்சு மொழி பேசும் ஆப்பிரிக்கா நாடுகள் விரும்பவில்லை. அந்நாட்டுப் பிரதமராகிய ஷோம்பேயின் அரசியலுக்கு அவர்கள் உற்சாகம் காட்டவில்லை என்று இருந்த போதிலும்; அவருடைய நிர்வாகத்திற்கு இன்னல் புரிய அண்டை நாடுகளிலிருந்து சதி வேலைகள் ஊக்குவித்தால், இதர ஆப்ரிக்கா நாடுகள் இத்தகைய சதிவேலைகளுக்கு விதிவிலக்காகாது என்று அவர்கள் கூறுகிறார்கள். இக்காரணத்தைக் கொண்டு மே 26 ஆம் தேதியன்று நடந்த ஒரு கூட்டத்திற்கு ஷோம்பேயுக்கு அவர்கள் அழைப்பு விடுத்தார்கள், அவரும் அதை ஏற்றுக் கொண்டார்.

சென்ற அக்டோபர் மாதம் நைஜர் தேசத்து நிர்வாகம் நாட்டு எதிர்க் கட்சியாகிய ஸவாபா கட்சியைச் சேர்ந்த சில பயங்கர வாதிகளைக் கைது செய்தார்கள். இவர்கள் சதி வேலைக்காரர்கள் என்பதும், அண்டை நாட்டிலிருந்து வந்தவர்கள் என்றும், நாட்டு அலுவலகக் கட்டிடங்களை நாசம் செய்வதற்கும், அரசாங்க ஊழியர்களைக் கொல்வதற்காக ஏவப்பட்டவர்கள் என்றும் தெரியவந்தது அவர்களில் சிலர் சீனாவில் நான்கிங் நகரில் பயிற்ச்சி அளிக்கப்பட்டவர்கள் என்றும், வேறு சிலர் அல்ஜீரியாவில் பயிற்சி அளிக்கப்பட்டவர்கள் என்றும் தெரியவந்தது. இவர்கள் யாவரும் கனுவின் தலைநகராகிய அக்ராவுக்கு வந்து, அங்கிருந்து நைஜர் நாட்டின் மீது ஆக்ரமிப்பு செய்ய வழி தேடினார்கள்.

நைஜர் நாட்டு ஜனாதிபதி டியோரின் ஹமானி என்பவரைக் கொல்வதற்கும் ஓர் ஸவாபா கட்சி அங்கத்தினர் முயற்சி செய்தார் என்று சொல்லப் படுகிறது. இத்தகைய சூழ்நிலையை வளர விடாமல் தவிர்க்கவழி தேட ஓ.ஸி.ஏ.எம்: ஸ்தாபனத்தின் அங்கத்தினர்கள் இப்பொழுது முன் வந்துள்ளார்கள்.

வருங்காலத்தில் ஓ.ஸி.ஏ.எம் ஸ்தாபனம் மிதவாதி ஆப்ரிக்கர்களுக்கு புரட்சி மனப்பான்மை கொண்ட நாடுகளைத் திருத்த ஓர் நல்ல கருவியாக உபயோகிக்க வாய்ப்பளிக்கிறது, பொருளாதாரத் துறையில் மேற்கு ஆப்ரிக்கா நாடுகள் முன்னேறுவதற்கும் இந்த ஸ்தாபனம் வாய்ப்பளிக்கும், இத்தகைய ஓர் நிலையை அடைவதற்கு இந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த நாடுகள் நைஜீரியாவுடன் உறவை வளர்க்க முன்வர வேண்டும். ஏனெனில், இப்பகுதியில் நைஜீரியா ஓர் மிருந்த சக்தி வாய்த நாடாகக் காட்சி அளிக்கிறது. இன்னுட்களாக மேற்கு ஆப்ரிக்கா, மத்திய ஆப்ரிக்கா, நாடுகள் அவைகள் இடர்பட்டு வந்த தம் தம் நிர்ணய மற்ற அரசியல் நிலைகளிலிருந்து மீட்டுக் கொள்ளவும் இந்தஸ்தாபனம் வழி காட்டுகிறது. ஆப்ரிக்கா நாடுகளுக்கு இன்று வேண்டியது பரஸ்பர ஒற்றுமையும், ஸ்திரநிலையும், இவ்விரண்டையும் பெற இந்த ஸ்தாபனம் ஓர் சிறந்த விசையாகவும் பிற்காலத்தில் உதவ வாய்ப்பு இருக்கிறது.

— —

# விண்வெளி ஆராய்ச்சி

புதுமையான விண்வெளி ஆராய்ச்சியிலே ஏறத்தாழ 100 நாடுகள், ஏதாவது ஒரு வகையில் ஈடுபட்டிருக்கின்றன. நாஸா என்ற அமெரிக்க தேசீய விமான இயல் விண்வெளி நிர்வாகத்துடன் பரஸ்பரம் நன்மை தரும் விண்வெளி ஆராய்ச்சித் திட்டங்களிலே கூட்டுறவு முறையில் ஒத்துழைக்கின்றன இந்த நாடுகள்.

இந்தியாவும் இவற்றில் ஒன்று. நடைமுறை விண்வெளி ஆராய்ச்சியில் ஈடுபட வேண்டுமென்ற ஆர்வம் உலக நாடுகளுக்கு 1960 ஆகஸ்டு 12-ம் தேதி இரவு பொங்கி எழுந்தது. பலூன் உருவம் கொண்ட மாபெரும் அமெரிக்கச் செயற்கைக் கோள் 'எக்கோ' அன்றிரவு வான வெளியிலே கவர்ச்சிகரமான முறையிலே மிக்க ஒளியுடன் வலம் வந்து கொண்டிருந்தது. உலகம் நெடுகிலும் கோடிக்கணக்கான மக்கள் அதைப் பார்த்தனர்.

தகவல் போக்குவரத்துக்கு செயற்கைக் கோள்களைப் பயன்படுத்த முடியுமா? இந்தத் துறையில் முதல் சோதனையைச் சாத்தியமாக்கியது 'எக்கோ' வின் வெற்றி. எக்கோ செலுத்தப்பட்ட திலிருந்து பூமியின் பலப்பல இடங்களிலிருந்து எக்கோவுக்கு கணக்கற்ற வானொலி அலைகள் அனுப்பப்பட்டு உலகில் மிகத் தொலைவில் இருக்கும் வேறு பல இடங்களுக்கு அவ்வலைகள் திரும்ப அஞ்சல் செய்யப்பட்டு வந்திருக்கின்றன. உலகம் மிக வேகமாகச் சுருங்கி வருவதற்கு எக்கோ வழி வகுத்துள்ளது.

பலப்பல தகவல் போக்குவரத்து செயற்கைக் கோள்கள் உலகின் மொழி முட்டுக்கட்டைகளையும் அந்த முட்டுக்கட்டைகள் வளர்க்கும் பிரச்னைகளையும் தகர்க்கக் கூடியவையாக இருக்கின்றன. டைரோஸ் விண்வெளிக் கோளின் அற்புதமான, திகைக்க வைத்த வெற்றி உலகம் நெடுகிலும் இருக்கும் வானியல் நிபுணர்களுக்கு ஊக்கமளித்துள்ளது. வானிலையைப்பற்றி பேசுவதோடு நிறுத்திக் கொள்ளாமல் அதுபற்றி ஏதாவது செய்ய முடியும், விரைவிலேயே செய்ய முடியும் என்ற நம்பிக்கை வானியல் நிபுணர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

ஏழு டைரோஸ் செயற்கைக் கோள்கள் விண்வெளியில் செலுத்தப்பட்டுள்ளன. முதலாவது டைரோஸ் 1960 ஏப்ரல் 1-ம் தேதி விண்வெளி ஏகியது. அந்த நாளிலிருந்து இதுவரை இரண்டரை லட்சம் வானிலைப் படங்கள் பூமிக்கு அனுப்பப்பட்டுள்ளன. இவையனைத்தும் பயன்படுத்தக் கூடியவை.

அட்லாண்டிக்கில் உருவாகும் புயல்களையும் பசிபிக்கில் உருவாகும் சூறுவளிகளையும் மனிதன் படைத்த இந்தப் பொறிகள் கண்டு பிடிப்பதுடன் இன்னும் பல அற்புதமான பணிகளையும் செய்கின்றன. பெருங்கடல்களில் இருக்கும் வெப்ப நீர் குளங்களையும் பனிக்கட்டிகளின் எல்லைகளையும், திறந்த கடல்களையும் படங்கள் வழிகாட்டியாகக்காட்டி விடுகின்றன இந்த செயற்கைக் கோள்கள். வெப்ப நீர் குளங்கள் பற்றிய தகவல் மீனவர்களுக்கு இன்றியமையாத உதவி; பனிக்கட்டிகளின் எல்லைகள், திறந்த கடல்கள் பற்றிய தகவல் கப்பல் போக்குவரத்துக்கு மிகவும் பயனுள்ளது.

மக்கள் குலத்தின் நன்மைக்காக தகவல் போக்குவரத்து கோள்களும் வானிலை கோள்களும் குறிப்பிடத்தக்க முறையிலே பணியாற்றி வருகையில், இன்னும் பலவேறு விண்வெளிக் கோள்கள், இயற்கையின் பரம ரகசியங்களையும் அம்பலத்துக்கு கொண்டு வருகின்றன. நாளைய உலகம், வாழ்வதற்குச் சிறப்பு மிக்க உலகமாகச் செய்ய இவையனைத்தும் உதவும்.

★

அரியலூர் டி. மு. கோ.
S. C. 248/65

உ. தா. கோமன் கிராமம் வடிவேல் படையாச்சி மகன் துரைக்கண்ணு படையாச்சி

—வாதி.

கரூர் தாலூகா மைலம்பட்டி மொம்ஸா ராவுத்தர் மகன் கமருதீன் ராவுத்தர்

—பிரதிவாதி.

ஷை நெம்பரில் பிரதிவாதி பேரில் புரோநோட் கடனுக்காக வாதி செய்த தாவா 29—7—65ல் ஈரங்கி, அன்று கோர்ட்டில் ஆக்ஷேபணையை தெரிவிக்காவிடில் ஒரு தலைப் பட்சமாக தீர்ப்புசெய்யப்படும்.

T. A. P. பழனிசாமி
2/6644/43 அட்வகேட்.

# பிரமை பிடித்த குழந்தைகள்

டாமி பிரௌனுக்கு வயது ஏழு. அவனுடைய இயல்பு விசித்திரமானது. சமவயதுக் குழந்தைகளைப்போல அவனால் சரளமாகப் பேச முடியாது; வாயைத்திறந்தால் பொருளற்ற சில ஒலிகள்தான் கிளம்பும். கூச்சமும் சிடுசிடுப்புமுள்ள அவன் அலாதிச் சுறுசுறுப்புடையவன். பெற்றோர்களுடன் மோட்டாரில் செல்லும்போது, போக்குவரத்து ஒழுங்கு செய்யும் பச்சை சிவப்பு விளக்குகளைக் கண்டால் அவன் அச்சமுற்று அலறுவான்.

டாக்டர்கள் அவனைப் பரிசோதனை செய்தார்கள். முழுச் செவிடாகப் பிறக்கும் சில குழந்தைகளுக்குப் பேச்சு வராது. ஆனால் டாமி பிரௌனுக்கு காதுக் கோளாறு இல்லை; வேறு ஊனமுமில்லை. அவன் ஒரு பிரமையினால் துயருருகிறான் என்று டாக்டர்கள் முடிவுக்கு வந்தார்கள். பிரமை என்பது நோய்தானா, அதற்குக் காரணம் என்ன, அதைக் குணப்படுத்துவது எப்படி எனப் பல தகவல்களை அறிவதில் பிரிட்டிஷ் வைத்திய விஞ்ஞானிகள் தீவிரக் கவனம் செலுத்துகிறார்கள்.

நான்கு ஆண்டுகளுக்கு முன்பு டாக்டர் மில்ரெட் கிரீக் தலைமையில் சில டாக்டர்கள் பிரமை பிடித்த சில குழந்தைகளைப் பரிசோதனை செய்து, பிரமையைக் கண்டுபிடிப்பதற்கு ஒன்பது குறிப்புகளைத் தொகுத்தார்கள். கல்வியும் சிகிச்சையும் அளித்து பிரமையை நீக்கிவிட முடியும் என்று தெரிகிறது.

பிரமை பிடித்த குழந்தைகளுக்கு வசதிகளும் சிகிச்சையும் அளிப்பதற்காக லண்டன் வட்டாரத்தில் வசிக்கும் 35 பெற்றோர்கள் 1962இல் ஓர் சங்கம் நிறுவினார்கள். பிரமைபிடித்த தங்களுடைய குழந்தைகளுக்கு வசதிகளை வழங்குவதில் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதும், அனுபவங்களைப் பரிமாறிக் கொண்டு அந்தக் குழந்தைகளைத் திருத்த முயல்வதும் அவர்களுடைய நோக்கம்.

பிரமை பிடித்த குழந்தைகளுடைய பொறிகள் இணைந்து செயலாற்றுவதால், பார்ப்பதையோ கேட்பதையோ மனதில் வாங்கிக்கொள்ளும் ஆற்றல் மழுங்கி யிருப்பதாகக் கூறுகிறார்கள். பிரமைபிடித்த குழந்தைகள் எவருடனும் பழகாமல் ஒதுங்கியிருக்கும்; மற்றவர்களை வெறித்துப் பார்க்கும்; அல்லது ஒரு கல்லையோ வேறு ஏதாவது ஒரு பொருளையோ கையில் வைத்துக் கொண்டு அதை ஆச்சர்யத்துடன் உற்றுப் பார்த்துக் கொண்டேயிருக்கும். உடன் பிறந்தவர்களையோ பெற்றோர்களையோ அடையாளம்தெரிந்து கொண்டு அவர்களிடம் அன்பாகப் பழகவும் அந்தக் குழந்தைகளுக்குத் தெரியாது.

பிரமைபிடித்த சில குழந்தைகள் புத்திசாலிகளாக இருப்பதும் உண்டு அந்தக் குழந்தைகள் இசை அல்லது கணிதத்தில் தனி ஆர்வம் காட்டுவதும் உண்டு. சிறிது பயிற்சியளித்தால் அந்தத்துறையில் தேர்ச்சி பெற்று விளங்குவதும் உண்டு.

பிரமை பிடித்த குழந்தைகளுக்கு இதுவரையில் வைத்தியம் சிகிச்சை ஏதும் கண்டுபிடிக்கவில்லை. அவர்களுடைய உளப்பாங்கைக் கணிதத்தில், பயிற்சிமூலம் அவர்களைச் சீர் திருத்த முயலுதல் இவை எல்லாம் ஆரம்பக் கட்டத்தில் தான் இருக்கின்றன. ஆனால் ஒரு குழந்தையின் தன்மையை அறிந்து குறையை நீக்குவதற்கு ஏற்றமுறையில் திட்டம் அமைத்துக் கொண்டு கல்விப் பயிற்சியளித்தால் வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கை உறுதிப்பட்டிருக்கிறது. இம்மாதிரிப் பயிற்சி பெறும் குழந்தைகளுடன், கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்ட டாமி பிரௌனை, அவனுடைய பெற்றோர்கள் விட்டு வைத்திருக்கிறார்கள். இப்போது அவனுக்கு ஒன்பது வயதாகிறது. இரண்டு ஆண்டுகள் பயிற்சி பெற்ற தன் விளைவாக, இப்போது அவனால் எழுத்துக்களை கூட்டிப்படிக்க முடியும். கேட்கும் வினாக்களுக்கு விடையளிக்க முடியும். போக்குவரத்தை ஒழுங்கு செய்யும் பச்சைசிவப்புவிளக்குகளைக் கண்டு அவன் இப்போது அஞ்சி அலறுவதில்லை.

ஆனால் டாமிபிரௌன் போன்ற குழந்தைகளை மெதுவாகத் தான் திருத்த முடியும். அதற்குப் பொறுமையும் தனிப் பயிற்சியும் தேவை.

பிரமைபிடித்தகுழந்தையை திருத்துவதற்கு நிதானமும் அவசியம். முதலில் சுற்றுச் சார்பை உணர்ந்து செயலாற்றுவதற்கு அந்தக் குழந்தைக்குப் பயிற்சி தர வேண்டும். கடிதம் அல்லது புத்தகத்தை எப்படி பிடித்துக் கொள்வது சாப்பிடுவது எப்படி என்று எல்லாம் அந்தக் குழந்தைக்கு கற்றுத் தர வேண்டும். சுற்றுச் சார்பையும் தன்னுடைய உற்றாரையும் ஒரு குழந்தை அறிந்து கொளவதற்கு பல மாத காலம் ஆகலாம். குழந்தைக்குப் பயிற்சிதரும் ஆசிரியர், அந்தக் குழந்தையின் உள நிலையையும் கிரகிக்கும் சக்தியையும் எடை போட்டுக் கொண்டு, ஏற்றமுறையில் கற்றுத்தர வேண்டும். முடியாது என்றாலும் பயிற்சி மூலம் குணப்படுத்தலாம் என்ற நம்பிக்கை இப்போது ஏற்பட்டிருக்கிறது.

★

சர்வகலாசாலை மாணவருக்கு

# ரேடியோ நாடகப்போட்டி

ரேடியோ நாடகங்களை எழுதுவதிலும், அவற்றைத் தயாரித்தளிப்பதிலும் ஆர்வம் உள்ள சர்வகலாசாலை மாணவர்களுக்கென விசேஷ போட்டி ஒன்றை நடத்த அனைத்திந்திய வானொலி நிறுவனம் ஏற்பாடு செய்துள்ளது. இப்போட்டி பிரதான இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் நடத்தப் பெறும். இப்போட்டியில் சேர்த்துக் கொள்ளப் படுவதற்கான நாடகங்கள் 1965 செப்டம்பர் 5-ந்தேதி வரை ஏற்றுக்கொள்ளப் படும்.

சர்வகலாசாலை மாணவர்களிடையே எழுத்துத் திறனும், நடிப்புத் திறனும் படைத்தவர்களின் திறன்களை வெளிப்படுத்த இப்போட்டி சிறப்பானதொரு வாய்ப்பாக விளங்கும். மேலும் இத்தகைய மாணவர்களின் திறன்கள் குடத்தில் இட்ட அகல் விளக்கு போன்று, வெளியில் அதிகம் தெரியாமல் அவர்களுடைய கல்லூரிகளுக்குள்ளேயே, அடைபட்டுக் கிடக்கின்றன. எனவே, இவர்களுடைய திறன்களை பொதுமக்களுக்கு வெளிப்படுத்துவதற்கு இப்போட்டி பெரிதும் வகை செய்யும் என்பதில் ஐயமில்லை.

போட்டியில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கான நாடகங்களை மாணவர்கள், அண்மையில் உள்ள வானொலி நிலையத்துக்கு அனுப்பி வைக்கலாம். நாடகங்கள் பிரதான இந்திய மொழிகளில் ஏதாவதொன்றிலோ அல்லது ஆங்கிலத்திலோ எழுதப்பட்டிருக்க வேண்டும். நாடகத்தின் நேரம் 30 நிமிஷத்திற்கு மேல் போகக் கூடாது. போட்டியில் சிறப்பிடம் பெறும் நாடகங்களுக்கு பல பரிசுகளும் வழங்கப்படும்.

பரிசு பெறும் நாடகத்தை எழுதியவருக்கு 100 ரூபாய் பரிசாக வழங்கப்பெறும் இது தவிர வேறு இதர சில்லறை பரிசுகளும் தயாரிப்பாளருக்கான பரிசுகளும் பல்வேறு பாகங்களை ஏற்று நடிக்கும் மாணவர்களுக்கான பரிசுகளும் கூட உள்ளன. அத்தந்த பிராந்தியத்தில் வசித்து வரும் வேற்று மொழி பேசும் மாணவர்கள் அவரவர் மொழியிலேயே நாடகங்களை போட்டிக்கு அனுப்பி வைப்பதற்கும் வசதி செய்து கொடுக்கப்படும்.

அதாவது டில்லி சர்வகலாசாலையைச் சேர்ந்த தமிழ் மொழி பேசும் மாணவர்கள் ஒன்று சேர்ந்து தமிழ் நாடகங்களைத் தயாரித்தளிக்கலாம். டில்லி வானொலி நிலையம், அம்மாணவர்களுக்கு அதற்கான வசதிகளைச் செய்து கொடுப்பதுடன் அவர்கள் தயாரித்தளிக்கும் நாடகங்களை போட்டியில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கென சென்னை வானொலி நிலையத்துக்கு அனுப்பி வைக்கும். இதே போன்று தமிழ் நாட்டில் உள்ள மராத்தி மொழி பேசும் மாணவர்கள் இப்போட்டியில் கலந்து கொள்ள விரும்பும் பட்சத்தில் அவர்கள் அதற்கான வசதிகளைப் பெற சென்னை வானொலி நிலையத்துடன் தொடர்புகொள்ள வேண்டும்.

அண்மையில், சில ஆண்டுகளுக்கு முன்னர்தான் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்த ரேடியோ நாடகப்போட்டி, ஆகாசவாணியின் சர்வகலாசாலைகளுக்கான ஒலிபரப்புகளில் வருஷாந்திரச் சிறப்பு நிகழ்ச்சியாக இடம் பெற்றும் விட்டது. இப்போட்டியில் மாணவர்கள் அதிக அளவில் ஆர்வம் காட்டி வருவதுடன் அவர்கள் இந்நாடகங்களில் பெரும் அளவில் கலந்து கொண்டு வருகின்றனர். இத்திட்டத்தின் மூல வாய்ப்புக்களையும் அவர்கள் இவ்வாண்டிலும் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

போட்டியில் கலந்து கொள்ள விரும்பும் மாணவர்கள் ஆகாச வாணியின் மதராஸ் வானொலி நிலையம் நிர்வாகஸ்தருக்கு எழுதி போட்டி பற்றிய விவரங்கள் விதிமுறைகள் முதலியவை பற்றித் தெரிந்துகொள்ளலாம்.

# நேருஜியின் உடைகளை அணிந்தவர்

அமரர் நேரு காலத்தில் அவரது ஆடைகளை அணிந்து, அவை கச்சிதமாகத் தமக்கு பொருந்தியிருக்கக் கண்ட ஒரே நபர் எவரெஸ்டை முதலில் வெற்றி கண்ட இந்தியரான ஸ்ரீ டென்சிங் நார்கே.

1953-ல் பிரிட்டிஷ் கோஷ்டி மெம்பராக எவரெஸ்ட்மீது ஏறி வெற்றி கண்ட அவர் லண்டனில் பிரிட்டிஷ் ராணியிடம் பரிசு பெற போகுமுன் டில்லியில் நேருஜியைச் சென்று பார்த்தார். நேருஜி அவரைப்பார்த்ததும் லண்டனில் மிகவும் குளிருமே. அதற்கு உங்களிடம் தகுந்த ஆடை இருக்கிறதா என பரிவுடன் வினவினார். அதற்கு நார்கே தம்மிடம் தக்க உடையில்லை என தலையசைத்தார். உடனே நேருஜி அவரைத் தமது ஆடைகள் வைக்கப் பட்டிருந்த அறைக்கு அழைத்துச் சென்று விரும்பிய ஆடைகளை எடுத்துக் கொள்ளுமாறு கூறினார். அத்துடன் நார்கே ஒவ்வொரு உடையாக எடுத்துப் போட்டுக் கொள்வதையும், அவை அவருக்கு கச்சிதமாகப் பொருந்தியிருப்பதையும் நேருஜி கண்டு மகிழ்ந்தார். நேருஜியின் தந்தை காலஞ்சென்ற மோதிலால் நேருவின் ஷெர்வானி ஒன்றும் அங்கிருந்தது. அதையும் ஷெர்பா ஸ்ரீ டென்சிங் அணிந்துகொண்டார். அதுவும் அவருக்குப் பொருந்தியிருந்தது. அதையும் அவர் எடுத்துக் கொண்டார்.

அன்று டென்சிங் தாம் எடுத்துக்கொண்ட ஆடைகளில் நேருஜியின் இரு பாண்டுகளை பாட்டனிருபர்களிடம் காட்டி இந்த விவரங்களைச் சொன்னார்.

61 வயது ஸ்திரீ

# பி. யு. ஸி. தேறினார்

கல்கத்தா பல்கலைக்கழக இவ்வாண்டு புகுமுக வகுப்புப் தேர்வில் தேறியவர்களில் ஸ்ரீமதி பிவா குஹா என்ற 61 வயது கிழவியும் ஒருத்தி. இக்கிழவிக்கு 12 குழந்தைகள் இருக்கிறார்கள். இந்த 12 பேரில் ஒருத்தியான தனது மகளுடன் ஸ்ரீமதி குஹாவும் இவ்வாண்டு புகுமுகத் தேர்வு எழுதியிருந்தார். இத்தேர்வில் மகளுடன் தாயும் தேறிவிட்டார்.

தமிழக

# சட்ட மன்றம்

தமிழக சட்ட மன்றம் இம்மாதம் 27-ம் தேதி காலை 11 மணிக்கு கூடுகிறது. இக்கூட்டத் தொடர் சுமார் பத்து நாட்கள் நடக்கும்.

தமிழக மேலவை இம்மாதம் 30 ம் தேதி பிற்பகல் சுமார் 3 மணியளவில் கூடும்.

# தேசீயக் கருத்தரங்கு

தலைவர் ஸ்ரீ காமராஜ் பிறந்தநாளை யொட்டி ஏற்பாடு செய்யப்பட்ட கருத்தரங்கு 10 தேதியன்று தேவர் மன்றத்தில் அமைச்சர் திரு. ராமையா அவர்களால் ஸ்ரீ ஹாஜாஷெரீப் அவர்கள் தலைமையில் துவங்கி இரண்டு நாட்கள் நடைபெற்றது. காவேரி பாசனப்பகுதிகளில் விவசாயம், கல்விமுறை, தொழில் வாய்ப்புக்கள், மாதரின் பங்கு ஆகிய நான்கு பிரிவுகளில் குழுக்கள் அமர்ந்து ஆராய்ந்தார்கள். 11 தேதி மாலை 6 மணியளவில் கூட்டுறவு மத்திய வங்கிக் கட்டிடத்தில் நடைபெற்ற பூர்த்திவிழாவில் முன்னாள் அமைச்சர் திரு. ராஜாராம் அவர்கள் தலைமையில்குழுத் தலைவர்கள் சமர்ப்பித்த அறிக்கையின் மீது பொருளாதார தத்துவ சாஸ்திரி திரு. பி. நடராஜன் கருத்துரை வழங்கினார். கருத்தரங்கு அறிக்கைகள் 15-ந் தேதி தலைவர் ஸ்ரீ காமராஜ் அவர்களிடம் சமர்ப்பிக்கப் படும்.

★



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy : Twelve Paise.